# கல்கி

KALKI 5.12.99 ரு. 4.50

கோவை ஸ்பெஷல்!



ஹீரோ,

ஹீரோ,



ஹீரோயின்!

# நீங்கள் லட்சாதிபதி ஆக இருக்க அவசியமில்லை
# புளூ சிப் நிறுவனங்களில் முதலீடு செய்ய




இப்போது மீண்டும் துவக்கம்

# புத்திசாலித்தனமாக இருந்தால் போதும்.

## யூடிஐ குரோத் செக்டார்ஸ் ஃபண்ட்-ல் முதலீடு செய்வீர்

பிராண்ட் வேல்யூ, பார்மா & ஹெல்த்கேர், ஸாஃப்ட்வேர், சர்வீசஸ் அண்ட் பெட்ரோ செக்டார்ஸ் • ஒவ்வொரு செக்டார் ஃபண்டிற்கும் குறைந்தபட்ச முதலீடாக ரூ.5,000/- கொண்டு, ஒன்றிலோ அல்லது அனைத்திலுமோ முதலீடு செய்வீர் • என்ஏவி அடிப்படையில் ஒரு செக்டாரிலிருந்து மற்றொன்றுக்கு எவ்வித கூடுதல் கட்டணமின்றி எளிதாய் மாற்றிக் கொள்ள வசதி • காலாண்டு நிலை விபரங்கள் வெளியிடப்படும் • தினசரி என்ஏவிக்கள் • தற்போதைய வரிச் சட்டங்களின்படி வருவாய் விநியோகத்திற்கு வருமான வரியிலிருந்து முழு வரிவிலக்கு.



**யூடிஐ குரோத் செக்டார்ஸ் ஃபண்ட்**

இருபதாம் நூற்றாண்டின் ஐந்து வைரங்கள் (மில்லெனியம் ஃபைவ்)

| நிகர சொத்து மதிப்பு* | |
|---|---|
| பிராண்ட் வேல்யூ ஃபண்ட் | ரூ.11.72 |
| பார்மா & ஹெல்த்கேர் ஃபண்ட் | ரூ.13.83 |
| ஸாஃப்ட்வேர் ஃபண்ட் | ரூ.16.48 |
| சர்வீசஸ் செக்டார் ஃபண்ட் | ரூ.11.22 |
| பெட்ரோ ஃபண்ட் | ரூ.10.93 |

* 8.10.99 அன்று



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

13, சர். வித்தல்தாஸ் தாக்கர்சி மார்க், நியூ மெரின் லைன்ஸ், மும்பை – 400 020.
தொ : 2031818. வருகை தருக www.unittrustofindia.com

[illegible]

**மண்டல அலுவலகம்** : 29 இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 5210335, 5210347. **கிளை அலுவலகங்கள்** கோயம்புத்தூர் போன்: 214973. சென்னை போன் : 5210335, 5210347. மதுரை போன்: 728186. திருச்சி போன்: 760060.

222/99 C TAM

## கடல் சுறா

ஒரு பாலிவுட் க்ளைமாக்ஸுக்குத் தேவையான எல்லா மசாலாக்களும் இருந்தது - ஹை ஜாக்கிங், சேஸிங், ஷூட்டிங்... கடைசியில் வில்லன்கள் கைது. 'உண்மையே வெல்லும்' போதனை! அதற்கென்ன... வழக்கம் போல் எல்லாம் முடிந்த பின் வராமல், எல்லாவற்றையும் முடித்து வைத்தது கடற்படையும், கடல் எல்லைப் பாதுகாப்புப் படையும் என்பதுதான் சிறிய வித்தியாசம். 10 மில்லியன் டாலர் பெறுமானமுள்ள, 7000 மெட்ரிக் டன் அலுமினிய உருளைகளை ஏற்றிச் சென்ற, எம்.வி. அலோன்ட்ரா ரெயின்போ என்ற சரக்குக் கப்பல் பனாமாவில் பதிவு செய்யப்பட்டது. இதைக் கடத்திச் சென்ற 15 இந்தோனேஷிய கடல் கொள்ளைக்காரர்களும் பலே கில்லாடிகள். கப்பலின் பெயரிலிருந்து பெயின்ட் வரை எல்லாவற்றையும் மாற்றி, கப்பலிலிருந்த பயணிகளையும் தாய்லாந்தில் இறக்கி விட்டு, கல்ஃபை நோக்கி விரைந்து கொண்டிருந்தார்கள், தமிழ்நாடு, கேரள கடற்கரைகளில் டிமிக்கி கொடுத்தவர்களை, மஹாராஷ்ட்ராவில் லபக்கி விட்டார்கள். தப்பிக்க முடியாது என்று தெரிந்தவுடன், வால்வுகளை எல்லாம் திறந்து விட்டு கப்பலை மூழ்கடிக்கப் பார்த்திருக்கிறார்கள். பிடிபட்டவர்களிடம் எக்கச்சக்கமான அந்நிய கரன்ஸி, ஏராளமான க்ரெடிட் கார்டுகள்! மும்பைத் துறைமுகத்துக்கு இழுத்து வரப்பட்டு, தற்சமயம் 'கோஸ்ட் கார்டு' கப்பலில் சிறைவைக்கப் பட்டிருக்கிறார்கள்; கப்பலின் பெயர் : "வீரா"!!!

## மாரடிக்கிறது MARD

பொறுத்துப் பொறுத்துப் பார்த்தனர். 'இனி ஒரு பைசா கூட பெயராது' என ஹெல்த் மினிஸ்டர் கறாராக அறிவித்து விட்டவுடன், பொங்கி எழுந்து விட்டனர் மஹாராஷ்ட்ரத்தைச் சேர்ந்த 'ரெஸிடெண்ட்' டாக்டர்கள். மற்ற மாநிலங்களிலுள்ள ரெஸிடெண்ட் டாக்டர்களெல்லாம் மாதம் ரூ. 15,000க்குக் குறையாமல் சம்பளம்



• ஆட்டோ ஆண்டவர்

வாங்கிக் கொண்டிருக்க, இங்கே நாலாயிரத்து ஐநூறுக்கு நாய் படும் பாடுபட வேண்டிய அவலத்தை எதிர்த்துதான் போர்க் கொடி உயர்த்தியிருக்கிறார்கள். 'ஏற்கெனவே திவாலாகிக் கொண்டிருக்கிறோம்; இவர்கள் கேட்கும் சம்பளத்தால் அரசுக்கு இன்னும் முப்பது கோடி துண்டு விழும், துண்டேந்துவதா?' என்கிறது அரசு. 'புதிய மந்திரிமார்களுக்கு கார் வாங்க கோடி கோடியா செலவழிக்க முடிகிறதா' எனக் கேட்கிறார்கள் மாணவ டாக்டர்கள். இந்தச் சண்டை சுமுகமாக முடியாவிட்டால் திங்கட்கிழமையிலிருந்து



அரசு மருத்துவமனைகளி விருந்து ரெஸிடெண்ட் டாக்டர்கள் மாயமாய் மறைந்து விடுவார்கள் - ஸ்டிரைக்! ஆனால் இம்முறை எல்லோரும் டாக்டர்கள் பக்கம்; லட்ச லட்சமாக செல வழித்துப் படித்து விட்டு, BMC யில் குப்பைக் கூட்டுகிறவரைக் காட்டிலும் குறைவாக சம்பாதிப்பதென்றால் எப்படி?

## காசளவா நேசம்?

மைல்கணக்கில் ஆட்டோக்கள் காற்று வாங்கிக் கொண்டு நிற்கையில், சவாரி கிடைக்காதா என டிரைவர்கள் ஏக்கப் பார்வை பார்க்கும் பரிதாபம் மும்பையில் சகஜமாகி விட்ட நிலையில், 42 வயது ஸ்டீவன் நாரிஸ் செய்வது, மும்பைக்காரர்களை ஆச்சர்யத்தில் ஆழ்த்தியே விட்டது. தினமும் காலையில் சாந்தாக்ரூஸ் வட்டாரத்தில் சவாரிகளை ஏற்றிச் செல்பவர், 11:30 ஆனதும் 'டாணென்று' பாந்த்ராவிலுள்ள மும்தாஜ் விராணி வீட்டிற்கு முன் ஆஜராகி விடுவார். போலியோவால் பாதிக்கப்பட்ட இந்த அம்மையாருக்கு 'அக்குப்ரெஷர்' முறையில் சிகிச்சை அளிக்க, தமது ஆட்டோவில் காட்கோபர் வரை அழைத்துச் செல்வார். அங்கே மதியம் 2:30 வரை காத்திருந்து, சிகிச்சை முடிந்த பின், மீண்டும் பாந்த்ராவில் கொண்டு விட்டு விடுவார். விஷம் போல் ஏறிக் கொண்டிருக்கும் மீட்டர், ரூ. 230ஐத் தொட்டிருக்கும். ஆனால் நாரிஸ் வாயைத் திறக்க மாட்டார். மும்தாஜ் கொடுப்பதை வாங்கிக் கொள்வார். பணத்துக்குப் பேயாய் அலைபவர்கள் மத்தியில் இப்படி ஒருவரா என வியக்காதவரில்லை; காட்கோபர் மருத்துவமனையில் இலவச சிகிச்சை அளித்து வரும் டாக்டர் 'பாரிக்' தான் தமக்கு முன்னுதாரணம் என்று சொல்லும் நாரிஸ், பல நாட்கள் பசியையே உணவாக்கி விழுங்கியிருக்கிறார். இவரைப் பார்த்து நம்மால் வியப்பைக் கூட விழுங்க முடியவில்லை!

• பிடிபட்ட கடல் கொள்ளையர்கள்

## விவாத மேடை

அண்மையில் முலுண்டு ஃபைன் ஆர்ட்ஸின் ஆதரவில் ஒரு நாதசுரக் கச்சேரி நடந்தது. சிருங்கேரி மடத்து ஆஸ்தான வித்வான்களாகக் கூறப்பட்டவர்கள், 'பாப்புலரான' பாடல்களாக இசைத்து, ஓரளவு கச்சேரி களைகட்டப் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்தார்கள். மேடையில் இரண்டு நாதஸ்வர வித்வான்கள், இரு தவில் வித்வான்கள், இவர்களுக்கிடையில் 'ஜால்ரா'வுக்கென சிறுவன் ஒருவனும் இருந்தது புரியும்படியாக இருந்தது. இவர்கள் தவிரவும் ஒருவர் மேடையில் அமர்ந்திருந்தது புரியாத புதிராக இருந்தது. ஆயிரம் பேர் அமரக்கூடிய காளிதாஸ் ஹாலில் நூறு பேரே இருந்ததால், வெறுத்துப் போய் வித்வான்கள் எழுந்து ஓடி விட்டால், அவர்களைப் பிடித்து இழுத்துக் கொண்டு வர இருக்கலாம் என்று ஒரு பிரஹஸ்பதி விளக்கம் தந்தார். கலைஞர்களை அறிமுகப்படுத்திய ராமன் அவர்கள், அவர் தவில் வித்வானின் மகன், டீச்சர் ட்ரெயினிங் படித்தவர் என்றதும் ஆடியன்சுக்கு ஆச்சர்யம் அதிகமாகி விட்டது. மேடை மேல் அவர் இருக்கும் மர்மம் பற்றி விவாதங்கள் தொடர்ந்தன. ஆனால்... இரண்டு பாட்டுகள் முடிந்த பின் விஷயம் விளங்கி விட்டது; முதல் தவில்காரரின் தவில் உயிரை விட, மீதமிருந்த ஒரே தவிலை, ஒவ்வொரு பாட்டிற்கும் அங்கிருந்து இங்கே, இங்கிருந்து அங்கே எனத் தூக்கிச் செல்வதே அந்த 'எக்ஸ்ட்ரா' மனிதனின் வேலையாக இருந்தது. "இந்தப் பிள்ளையாண்டானை அலைக்கழிக்காம, பேசாம மேடை மேல தவிலை உருட்டி விட்டிண்டிருந்திருக்கலாம்; நலங்கு மாதிரியாக இருந்திருக்கும்" என ஒரு மாமி ஜோக் அடித்ததைச் சொன்னால் நிச்சயமாகக் கோபித்துக் கொள்வார்கள்.

— ஜெயஸ்ரீ ராஜ்

## மாதம் ஒரு நகரம்

# திருச்சிக்கு வருகிறோம்!



திருச்சிவாசிகளே, வரலாறு காணாத மழை வெள்ளத்திலிருந்து இப்போது மீண்டு, சகஜ வாழ்க்கைக்குத் திரும்பியிருப்பீர்கள்.

வெள்ளம் வடிந்திருந்தாலும் பிரச்னைகள் மட்டும் அப்படியேதான் இருந்து கொண்டிருக்கும். வழக்கமான பிரச்னைகளோடு இப்போது வெள்ளத்தால் ஏற்பட்ட புதிய பிரச்னைகளும் சேர்ந்து கொண்டிருக்கும்.

இவற்றுக்கெல்லாம் திருச்சி மாநகராட்சியும் அரசும் என்ன நடவடிக்கைகள் எடுத்துள்ளன? எடுத்து வருகின்றன? அல்லது எடுக்கத் தவறியுள்ளன?

எல்லாப் பிரச்னைகளையும் உடனடியாக எங்களுக்கு எழுதியனுப்புங்கள்.

அரசு மற்றும் தனிமனித சாதனைகள் இருந்தாலும் தவறாமல் எழுதுங்கள்.

உங்கள் கடிதங்கள் எங்களுக்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 13.12.99.

நாங்கள் 15,16,17தேதிகளில் திருச்சிக்கு நேரில் வந்து, தேவையானால் உங்களையும் சந்தித்துப் பிரச்னைகளை ஆராயப் போகிறோம்.

– ஆசிரியர்

# ஹீரோயின் சோனியா!

ராஜீவ் கொலையாளிகளுக்கு – குறிப்பாக நளினியைத் தூக்கிலிடுவதன் மூலம் அவரது பெண் குழந்தை அனாதையாவதைத் தாமோ தமது வாரிசுகளோ விரும்பவில்லை என்று சோனியா அறிவித்திருப்பதன் மூலம், அவர் ஒரு ஹீரோயின் அந்தஸ்துக்கு உயர்ந்திருக்கிறார். அல்லது உயர்த்தப்பட்டிருக்கிறார்.

ராஜீவ் கொலையாளிகளுக்கு – குறிப்பாக நளினிக்கான தூக்குத் தண்டனையை உச்சநீதிமன்றம் உறுதி செய்தவுடனேயே சோனியா இப்படி அறிவித்திருந்தால் உண்மையிலேயே அவர் ஒரு ஹீரோயின் ஆகியிருப்பார். அப்படிச் செய்யாமல், காலம் தாழ்ந்து சொல்ல வேண்டிய அவசியமென்ன? இதன் பின்னணிதான் விசித்திரமானது.

'கில்ட் அப் சர்வீஸ்' என்று ஒரு மகளிர் அமைப்பு. 'எந்தப் பெண்ணுக்கும் மரண தண்டனை கூடாது' என்று முழக்கமிடும் அமைப்பு இது. இதன் கௌரவத் தலைவர் முன்னாள் ஜனாதிபதி வி.வி. கிரியின் மருமகளான மோகினி கிரி. இதன் பேச்சாளர் நித்யா ராமகிருஷ்ணன் என்கிற டெல்லி தமிழ் வக்கீல். மகளிர் விடுதலையே தமது மூச்சு என்பதே இவர் பேச்சு! தவிர, ஜீனா ஸோராப்ஜி, டயானா கம்பாட்டா, அருணா டால்மியா, ஷாந்தா குப்தா, கிருஷ்ணா மொஹந்தி, ஷ்யாமா அகர்வால் என்று ஏராளமான வசதி படைத்த மகளிரால் போஷிக்கப்படும் அமைப்பு இது. இதற்கு ஜனாதிபதியே பிரதான புரவலர் என்றால் இதுபற்றிச் சொல்லவே வேண்டாம்!

இந்த அமைப்பும் 'மகளிர் மிலெனியம் மொபலைசேஷன்' என்ற அமைப்பினரும் சேர்ந்து, தங்கள் அமைப்பின் கொள்கைக்கு எதிராக 'ஒரு பெண்ணுக்குத் தூக்குத் தண்டனையா?' என்கிற கோஷத்தை வீதிக்கு எடுத்து வருவது என்று முடிவெடுத்தனர்.

இதுபற்றி விளக்குவதற்காக டெல்லி மகளிர் பிரஸ் கிளப் (டெல்லியில் மகளிருக்குக்கென்று தனியான பிரஸ் கிளப் உண்டு,

இந்த சமத்துவ யுகத்திலும்!) பில் பத்திரி கையாளர் சந்திப்பு ஒன்றுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

அதில், "எந்தவொரு சிசுவும் அரசி னாலேயே அனாதையாக்கப்படக் கூடாது என்று சோனியாஜியே எங் களிடம் கூறியிருக்கிறார். எனவே, அவரே முன்வந்து நளினிக்கு மன்னிப்பு வழங்க வேண்டும். கூடவே, பிறருக்கும் மரண தண்டனையை ஆயுள் தண்ட னையாகக் குறைக்கப்பட வேண்டும்!" என்று மோகினி கிரியும் நித்யா ராம கிருஷ்ணனும் இரட்டை நாயனங் களாகப் பொரிந்து தள்ளினார்கள்.

இந்தக் கூட்டம் ஒருபுறம் நடந்து கொண்டிருக்கும்போது, இதுபற்றிக் கேள்விப்பட்ட பிரியங்கா, தமது அன்னையிடம் தீவிரமாக விவாதித் திருக்கிறார். பத்திரிகையாளர் சந்திப் பில் விடுக்கப்பட்ட மகளிர் அமைப் பின் கோரிக்கைகள் மறுநாள் செய்தி யாகப் பிரசுரமாகும் போது பல பிரச் னைகள் வரலாம். அதனால் அதற்கு முன்னரே நாம் நளினிக்கு மன்னிப்பு வழங்கி விட்டதாக அறிவித்து விடுவது தான் நல்லது; அப்போதுதான் நமது குடும்பத்தின் கருணை பற்றிப் பேசப் படும் என்று பிரியங்கா அன்னைக்கு ஆலோசனை வழங்கியிருக்கிறார். ராகுலும் வழிமொழிந்திருக்கிறார். அப்புறம்தான் சோனியா அறிக்கை வெளியிடச் சொல்லியிருக்கிறார். ஜனாதிபதியைச் சந்தித்துப் பேசியிருக் கிறார். 'நளினிக்கு மன்னிப்பு வழங்குங் கள்' என்கிற சோனியாவின் கோரிக் கையைப் படித்ததும் நெகிழ்ந்து விட் டாராம் ஜனாதிபதி நாராயணன்.

இந்த விஷயத்தைக் காங்கிரஸ் காரியக் கமிட்டியில் கலந்து ஆலோசிக் காமல், தன்னிச்சையாக சோனியா இப்படியொரு முடிவெடுத்தது தவறு என்று அர்ஜுன் சிங் கூறியிருக்கிறார். இது சோனியாவின் குடும்ப விஷயம் என்பதால் கட்சியிடம் விவாதிக்கத் தேவையில்லை என்றும் கட்சிக்குள் இன்னொரு கருத்து நிலவுகிறது!

எல்லாம் சரி, சோனியாவின் இந் தக் 'கருணை' உள்ளம் பற்றி பிற கட்சிக் காரர்கள் என்ன நினைக்கிறார் கள்? என்ன காரணத்தாலோ தெரிய வில்லை, கருத்துச் சொல்லவே மறுக் கிறார்கள்.

— வெங்கட்



# 1500 குழந்தைகளின் அன்னை!

• சேவா நிலையத்தில் குழந்தைகள்

**ப**தினாலு வயதில் திருமணமான பெண்ணுக்கு இருபத்தைந்து வயதில் கணவன் இறந்து போனால் வாழ்க்கை எப்படித் தென்படும்? இந்தியப் பெண்களுக்கு அது ஒரு முடிவற்ற இருட்குகை.

ஆனால், தில்லையம்மைக்கு அந்தக் காரிருள், ஒரு பெரும் விடிவின் தொடக்கமாயிருந்திருக்கிறது.

"1946-ம் வருஷம். மெட்ராசுக்கு காந்தி வந்திருந்தாரு. இந்தி பிரசார சபாவுல அவர் நடத்திய பஜனைல கலந்துக்கலாம்னு போனேன். என்னைப் பத்தி விசாரிச்சி ரொம்ப வருத்தமாயிட்டவரு, 'பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் சேவை செய்து உன் வாழ்க்கைக்கு ஒரு அர்த்தம் தேடிக்க'ன்னாரு. அவர் சொன்னதை அப்படியே ஏத்துக்கிட்டு கோயமுத்தூர் வந்தேன். இதை ஆரம்பிச்சிட்டேன்" என்கிறார் தில்லையம்மை.

'இதை' என்று அவர் குறிப்பிட்டது, சுமார் ஒரு ஏக்கர் பரப்பில் அமைந்துள்ள அவரது சேவா நிலையத்தை.

அனாதைப் பெண் குழந்தைகளுக்கான இல்லம், வேலைக்குப் போகிறவர்களுக்கு ஹாஸ்டல், தையல் உள்ளிட்ட தொழில் பயிற்சிகள் வகுப்பு, உயர்நிலைப் படிப்பு வரை போதிக்கும் பள்ளி எனக் கிளை விரித்திருக்கிறது சேவா நிலையம்.

வள்ளியம்மைக்கு இப்போது எண்பத்தியாறு வயதாகிறது. ஜம்மென்று நாற்காலி போட்டு அமர்ந்து, உரத்த குரலில் ஊழியர்களை அழைத்துக் கட்டளைகள் இட்டு, தாமேதான் நிர்வகிக்கிறார். சேவா நிலையத்தை விட்டு அங்கே இங்கே போவதில்லை இவர்.

"கூடப் பொறந்தவங்கள்ளாம் இங்க பக்கத்துலதான் இருக்காங்க. நான் யார் வீட்டுக்கும் போறதில்லை. எப்பவாச்சும் அவங்க வந்து பார்த்துட்டுப் போவாங்க. நான் போனா இங்க பிள்ளைங்களை யார் பாத்துக்கறது?" என்கிறார். நிலையத்தில் மொத்தம் 1500 பெண்கள், குழந்தைகள்.


• தில்லையம்மை

தந்தை வழியில் தமக்குக் கிடைத்த சொத்தைத்தான் சேவா நிலைய வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். வள்ளல்களின் நிதி உதவி, கூடுதல் செளகர்யங்களுக்கல்லாமல் பற்றாக்குறைகளைச் சரிசெய்யவே உதவுகிறது.

"நிதி போறலைன்னெல்லாம் சொல்ல மாட்டேன். நல்லா, நெறைய, போதுமானது இருக்கு. குழந்தைகளுக்கு ஒரு கஷ்டம் காட்டக் கூடாது. என் கவலையெல்லாம் என் காலத்துக்கப்புறம் இதை யார் எடுத்து நடத்தப் போறாங்கன்றதுதான். காந்திய நோக்கோட இருக்கற, தன்னலமில்லாத ஒரு ஆளைத் தேடிட்டிருக்கேன். அது கிடைச்சா போதும்!" என்கிறார்.

இவ்வாண்டு ராணி மெய்யம்மை விருது ஒரு லட்ச ரூபாயை இவருக்கு வழங்கி, இவரது சேவையைச் சிறப்பித்திருக்கிறார்கள் இராஜா அண்ணாமலை செட்டியார் அறக் கட்டளையினர்.

"இதான் அந்தப் பட்டம்!" என்று விருதுப் பட்டயத்தை ஆர்வமுடன் காட்டும் ஆச்சிக்கு எட்டு வயதுப் பெண்ணின் உற்சாகம் இப்போதும் இருக்கிறது.

— ரம்பா

படம் : வெங்கடேஷ்

# ஸ்ரீ டிராவல்ஸ்

194A, முதல் மாடி, அண்ணாசாலை, சென்னை - 600 004. பேஜர் : 9632-701579

12/A, ரெட்ஹில்ஸ் ரோடு, கொளத்தூர், சென்னை - 600 099.

போன் : 5878620, பேக்ஸ் : 5584866, இ-மெயில் :sritrave@satyam.net.in

ஸ்ரீ டிராவல்ஸ் அளித்திடும்

## பிரத்தியேக குளிர் கால தேனிலவு சுற்றுலாக்கள்

(வயது முதிர்ந்தவர்களும் வரலாம்)

### ST - 13 கஜுராஹோ -சிம்லா சுற்றுலா

உலகப்புகழ்பெற்ற கஜுராஹோ

சிற்பங்களை காணும் அரிய வாய்ப்பு !

புறப்படும் தேதி : 26 - 12 - 99

**சென்னை -கஜுராஹோ- டில்லி - சண்டிகார் - சிம்லா - குலு - மணாலி - ஆக்ரா - சென்னை.**

பயண நாட்கள்:13 பயணத்தொகை :ரூ.6,900/-

அருமையான ஹோட்டல்களில் இருவருக்கான பிரத்தியேக தங்கும் அறைகளுடன்

(கலர் டி.வி., வாட்டர் ஹீட்டர், டெலிபோன், கார்பெட் வசதிகளுடன் கூடியவை)

### ST - 14 கோவா சுற்றுலா

புறப்படும் தேதி : 16.01.2000

சென்னை – அவுரங்காபாத் – அஜந்தா – எல்லோரா –சனி சிங்கநாப்பூர்– சீரடி – மும்பாய் – கோவா – சென்னை.

பயண நாட்கள் :8 பயணத்தொகை: ரூ.4,800/-

### ST - 15 அந்தமான் சுற்றுலா

புறப்படும் தேதி : 28-01-2000

*சென்னை - போர்ட் பிளேர் - சென்னை.*

பயண நாட்கள் :12 பயணத்தொகை : ரூ.6,000/-

(விமானப் பயணம் வேண்டுவோருக்கும், கப்பலில் உயர்வகுப்பு வேண்டுவோருக்கும் பிரத்தியேக வசதி உண்டு)

### ST - 16 இராஜஸ்தான் சுற்றுலா

புறப்படும் தேதி : 18.02.2000

சென்னை - ஜெய்ப்பூர் - உதயப்பூர் - ஜோத்பூர் - ஆஜ்மீர் - மவுண்ட் அபூ - பில்வாராசிற்பங்கள் - துவாரகா - சோம்நாத் - கிர் காடுகள் - அகமதாபாத் - மும்பாய் - சென்னை.

பயண நாட்கள்:14 பயணத்தொகை :ரூ.6,500/-

(தரமான ஹோட்டல்களில் தங்கும் வசதியான அறைகள் மூன்று வேளையும் தரமான தென்னிந்திய சைவ உணவு)



**பிரத்தியேக A/c சொகுசு பேருந்து சுற்றுலாக்கள்**



### ஆந்திரா, கர்நாடக சுற்றுலா

சென்னை -திருத்தணி-திருப்பதி-புட்டபர்த்தி-மந்திராலயம்-கர்நூல்-ஸ்ரீசைலம்-மகாநந்தி-அகோபிலம்-காளஹஸ்தி-சென்னை

பயணநாட்கள் : 5 பயணத்தொகை:ரூ.2,800/-

### நவக்கிரக சுற்றுலா

பயணநாட்கள் : 3 பயணத்தொகை:ரூ.900/-



A/c சொகுசு பேருந்தில் தினசரி

## பாலாஜி தரிசனம்

**பயணத்திட்டம் 1 :**

காலை 6.30 மணிக்கு புறப்பட்டு தரிசனம் முடிந்தபின் இரவு 9.30 மணிக்கு மேல் வீடு திரும்புதல்.

நபர் ஒன்றுக்கு ரூ.650/-

**பயணத்திட்டம் 2 :**

மாலை 3 மணிக்கு புறப்பட்டுதிருமலையில் இரவு தங்குதல் காலையில் தரிசனம் முடிந்து மாலை 4 மணிக்கு வீடுதிரும்புதல்.

நபர் ஒன்றுக்கு ரூ.750/-

எமது மேற்கண்ட இரண்டு பயணத்திட்டங்களிலும் உயர்தர ஹோட்டலில் காலை சிற்றுண்டி, பகல் உணவு, மாலை காரம் காபி, மற்றும் இரவு உணவு, மினரல் வாட்டர், செய்தித்தாள்கள், வீடியோ, மற்றும் அனைத்து வசதிகளும் உண்டு. 4 டிக்கட்டுக்கு மேல் இருந்தால் வீட்டில் இருந்து அழைத்து மீண்டும் வீட்டிலேயே விட்டுவிடுகிறோம். (சென்னை நகர எல்லைக்குட்பட்டது) மூன்று நாட்களுக்கு முன்னதாகவே ரிசர்வ் செய்துக்கொள்ளவும் (திருமலையில் முடி இறக்க, காது குத்த சிறப்பு ஏற்பாடுகளும் உண்டு)

**அனைத்து கிரெடிட்கார்டுகளும் ஏற்றுக்கொள்ளப்படும்! L.T.C.வசதி உண்டு!!**

**(உங்கள் இருக்கைக்கு உடனடியாக முன்பதிவு செய்துக்கொள்ளவும்)**



சிதிலமான குடிசையில் இறந்து போனவர்கள் இருக்கிறார்களா என்று தேடும் ராணுவ வீரர்

"செய்தித்தாள்களில் படித்தாலும், டெலிவிஷனில் பார்த்தாலும் கூட, ஒரிசாவைத் தாக்கிய புயல் விட்டுச் சென்ற சேதங்களின் முழு பரிமாணத்தையும் புரிந்து கொள்ள முடியாது. அளவிட முடியாத பாதிப்பு அது!" என்கிறார் டாக்டர் கே. பி. மிஸ்ரா. ஒரிசாவைச் சேர்ந்த இவர் கடந்த இருபத்தியிரண்டு வருடங்களாகச் சென்னையில் வசித்து வருகிறார். புயல் வீசிய போது அங்கே இருந்தவர். தற்போது, சென்னையிலிருந்து நிவாரண உதவிகளைத் திரட்டுவதிலும், அவற்றை ஒரிசாவுக்கு அனுப்புவதிலும் ஈடுபட்டிருக்கிறார். சென்னையில் உள்ள ஒரிசாக்காரர்கள் நடத்தி வரும் உத்கல் கழகத்தின் முன்னாள் தலைவர். தினமும், இவரது உறவினர்கள் முதல் ஒரிசா கவர்னர் எம். எம். ராஜேந்திரன் வரை ஒரிசா நிலைமை பற்றி இவருக்குத் தகவல் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர் சொல்கிறார்....



• டாக்டர் மிஸ்ரா

தமிழகத்தில் சென்னையில் தொடங்கி, கன்யாகுமரி வரை என்பதுபோல் ஒரிசாவின் மொத்த கடலோரப் பகுதியும் வடக்கே பலாசோர் முதல் தெற்கே பெர்ஹாம்பூர் வரை பெரும் பாதிப்புக்குள்ளாகியுள்ளது. பன்னிரண்டு மாவட்டங்களில் உள்ள ஆயிரத்து எழுநூற்று நாற்பத்தெட்டு கிராமங்கள் கடுமையாக பாதிக்கப்பட்டுள்ளன.

இவ்வளவு மோசமாக பாதிக்கப் பட்டதற்கு மூன்று காரணங்களைச் சொல்லலாம். மணிக்கு இருநூற்று ஐம்பது முதல் முந்நூறு கிலோ மீட்டர் வேகத்தில் புயல் காற்று அடித்துள்ளது. இதனால் வீடுகளின் கூரைகள் பிய்த்துக் கொண்டு போய் விட்டன. மரங்கள் வேரோடு சாய்ந்து விட்டன. தந்திக் கம்பங்கள் நெளிந்து வளைந்து விட்டன.

இரண்டாவதாக, முப்பது அடி உயரத்திற்கு எழுந்த கடல் அலைகள், கடலிலிருந்து முப்பது கிலோ மீட்டர் தூரம் வரை உள்ளே புகுந்து விட்டன. இதனால், அப்பகுதி கடற்கரையோரம் இருந்த மக்களும், விலங்குகளும் தண்ணீரில் சிக்கித் தவித்து, கடலுக்கு அடித்துச் செல்லப்பட்டு விட்டனர். அலைகள் அடங்கிய பின்பு, கடற்கரையில் கணக்கில்லாத மனித உடல்களும், விலங்குகளுடைய உடல்களும் காணப்பட்டன. சுமார் நாற்பத்து எட்டு மணி நேரத்துக்கு இது தொடர்ந்தது.

மூன்றாவதாக, தொடர்ந்து முப்பத்தி ஆறு மணி நேரம் பெய்த மழை; எங்கு

## — ஒரிசா பற்றி ஒரு நேரடி ரிப்போர்ட்



பார்த்தாலும் வெள்ளக்காடாகி விட்டது. எல்லா தொடர்புகளும் துண்டிக்கப்பட்டு ஒரிசா மாநிலம், நம் நாட்டிலிருந்தே துண்டிக்கப்பட்டு விட்ட நிலைமை ஏற்பட்டுவிட்டது.



• வீடுகளை இழந்த மக்கள்

புயல் வருவதற்கு இருபத்தி நாலு மணி நேரம் முன்னால் இருந்தே ரேடியோவிலும், டீ.வி.யிலும் புயல் பற்றிய எச்சரிக்கை கொடுத்துக் கொண்டுதான் இருந்தார்கள். அதற்கு பத்துப் பன்னிரண்டு நாட்கள் முன்பும் இதே போல எச்சரிக்கை செய்தார்கள். ஆனால், அப்போது எச்சரித்த அளவுக்குக் கடுமையாகப் புயல் தாக்கவில்லை. எனவே, இரண்டாவது தடவை எச்சரித்தபோது மக்கள் அதை சீரியஸாக எடுத்துக் கொள்ளவில்லை.

அபாயம் நெருங்க, நெருங்க, புயல் தாக்கக் கூடிய அபாயம் இருந்த பகுதி முழுவதிலும், ஒலிபெருக்கி மூலம் எச்சரித்து, மக்களை, உடனடியாகத் தங்கள் இருப்பிடத்தை விட்டு வெளியேறி, பாதுகாப்பான இடங்களுக்குச் செல்லும்படி கூறினார்கள். ஆனால், மக்கள், தங்கள் உடைமைகளை விட்டுவிட்டு வெளியேறத் தயங்கியதாலும், பாதுகாப்பான இடங்களுக்குச் செல்ல போதிய அளவுக்கு ஏற்பாடு செய்யாததாலும், வேறு வழியில்லாமல், மக்கள் புயல் மழையில் சிக்கிக் கொண்டனர்.

மாநில நிர்வாகம் ஸ்தம்பித்துப் போனது. எந்த அளவுக்கு பாதிப்பு என்பதை கணிக்கவே முடியவில்லை. உணவு இல்லை; குடி தண்ணீர் இல்லை. 'பகவான் ரட்சா கரோ!' (-ஆண்டவனே காப்பாற்று!) இதுதான் எங்கும் ஒலித்த ஓலம்! பலரும், "நான் ஏன் இன்னும் உயிரோடு இருக்கிறேன்" என்று கண்கலங்கினார்கள். மனிதப் பிணமும், இறந்த விலங்கும் மிதக்கும் குளத்துத் தண்ணீரை வேறு வழியின்றிக் குடித்தாக வேண்டிய கட்டாயம் நிலவிய பகுதிகளும் உண்டு.

ஆனால், பாதிக்கப்பட்ட மக்களைக் காப்பாற்ற வந்த இறை தூதர் என்று ஆந்திர முதலமைச்சர் சந்திரபாபு நாயுடுவைத்தான் கூற வேண்டும். அவருக்குத்தான் என்ன ஒரு புத்திசாலித்தனம்! உடனடியாக, 'ஹாம்' ரேடியோக்காரர்களை அனுப்பி, நாட்டின் மற்ற பகுதிகளுடன் தகவல் தொடர்பு ஏற்படுத்திக் கொடுத்தார். சாலை வழிகளும், ரயில் பாதையும் பாதிக்கப்பட்டு விட, ஐந்து கப்பல்களில் நிவாரண உதவிகளை அனுப்பி வைத்தார். காவல் துறையினரை, மின்சார ரம்பங்கள் சகிதம் அவர் அனுப்பி வைத்ததால்தான், சாலையின் குறுக்கே விழுந்து கிடந்த மரங்களை வெட்டி விரைவாக அப்புறப்படுத்த முடிந்தது. ஆந்திர எல்லைப் பகுதியில்

# ஒரிசா வழிகாட்டி நாயுடு!

தொடங்கி, ஒரிசா தலைநகர் புவனேஸ்வர் வரை, மரங்களை அப்புறப்படுத்தி, தாற்காலி கமாக ரோடுகளை சீர்செய்து, நிவாரண உதவிகள் வந்து சேர வழி செய்தார் நாயுடு. 'ஒரிசா தேசம்' என ஒரு கட்சி ஆரம்பித்து ஒரிசாவில் வரும் தேர்தலில் போட்டியிட் டால், ஒரிசாவுக்கும் நாயுடு முதல்வராகி விடுவார் என்று தமாஷாய்ச் சொல்கிறார் கள். அந்த அளவுக்கு அவரது உதவியின் வேகம் இருந்தது.

ஆனால், வெட்கக்கேடான விஷயமும் நடக்காமலில்லை. முதல் சில நாட்களில் வந்து சேர்ந்த நிவாரண உதவிகள் குறிப்பாக உணவுப் பொருள்கள், சரியான முறையில் மக்களுக்குப் போய்ச் சேரவேயில்லை. விநி யோகிக்க வேண்டிய பொறுப்பில் இருந்த வர்கள், தங்களின் சொந்த தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக, தாங்களே எடுத்துக் கொண்டு போய் பதுக்கிக் கொண்டு விட்டனர். ஒன்றுமே கிடைக்காத பஞ்ச சூழ்நிலை அவர்களை இப்படிச் செய்ய வைத்து விட்டது. நல்ல காலம், சீக்கிரமே நிலைமை சீராகி விட்டது!

பல்வேறு தரப்பிலிருந்தும் நிவாரண உதவிகள் வந்து குவியத் தொடங்கி விட் டன. புவனேஸ்வரில் உள்ள கலிங்கா ஸ்டேடியத்தில் வந்து குவிந்தவை வெறும் உணவு; துணிமணிகள் இல்லை; இந்திய மக்களின் ஒட்டுமொத்த அன்பும், அக்கறை யும் என்றே கூறலாம். தமிழ்நாடு, ஆந்திரா, பஞ்சாப் மாநிலங்கள் உடனடியாக நிவார ணப் பணியில் உதவி செய்தது குறிப்பிடத் தக்கது. தமிழ்நாட்டிலிருந்து ஐந்து ரயில்களில் உதவி வந்தது. பஞ்சாப் அரசு, தினமும் ஒரு லட்சம் பேருக்கு உணவு அளித்துக் கொண் டிருக்கிறது. இப் பணி, அடுத்த ஆறு மாதங் கள் வரை தொடரும் என்பது நன்றி பாராட் டத்தக்க ஒன்று.

இன்று, ஆர்.எஸ்.எஸ்., ராமகிருஷ்ணா மிஷன், மிஷினரிஸ் ஆஃப் சாரிடி போன்ற இந்தியாவைச் சேர்ந்த அமைப்புகள் மட்டுமின்றி செஞ்சிலுவைச் சங்கம், ஜெர்மன் அமைப்புகள், நோபல் பரிசு பெற்ற டாக்டர்ஸ் வித்அவுட் ஃப்ரான்டியர் போன்ற அகில உலக அளவிலான அமைப்பு களும் சேர்ந்து சுமார் இருபத்தைந்து அமைப்புகள் நிவாரணப் பணிகளில் ஈடுபட் டுள்ளன. ஆரம்ப கட்டத்தில், இவர்களுக்கு இடப்பட்ட பணி, இறந்த மனித, விலங்கு களின் உடல்களை எரிப்பதுதான். எல்லா உடல்களையும் மனித, விலங்கு வித்தியாச மில்லாமல் ஒரே இடத்தில் குவித்து மண்ணெண்ணெய், டீசல், டயர் என்று மேலே போட்டுத் தீயிட்டனர்.

இப்போதுள்ள நிலை என்ன? உணவு, உடை இவை ஏராளமாய் வந்து இறங்கி விட்டன. இது குளிர்காலம் என்பதால் போர்வை, பெட்ஷீட் இவைதான் அதிகமாய் தேவைப்படுகின்றன. எனவே, தமிழக மக்கள், பெட்ஷீட், போர்வை கொடுத்து உதவுங்கள் என்று நான் கேட்டுக் கொள் கிறேன்.

நாம் இப்போது செய்கிற உதவிகள் எல்லாம் இப்போதைய நெருக்கடியான நிலைமையைச் சமாளிப்பதற்குத்தான். பாதிக்கப்பட்ட பன்னிரண்டு மாவட்டங்களி லும் மொத்தம் இருபத்தைந்து லட்சம் குடும் பங்கள் வீடுகளை இழந்து விட்டார்கள். பள்ளிக்கூடங்கள் எல்லாம் தரைமட்டமாகி விட்டன. சாக்பீஸ் முதல், பள்ளிக் கட்டடம் வரை அனைத்துக்கும் வழிசெய்து தர வேண்டும். மக்களின் பிழைப்புக்கு வேலை வாய்ப்புகளை ஏற்படுத்தித் தர வேண்டும். மருத்துவமனைகள் கட்டித் தர வேண்டும். இப்படி பெரிய, நீண்ட காலத் தேவைகள் காத்துக் கொண்டிருக்கின்றன. சென்னை உத்கல் சங்கம் சார்பில் இருபது கிராமங் களில் பள்ளிக்கூடங்களைக் கட்டி, அவற்றின் மொத்த தேவைகளையும் வழங்கும் பணியை ஏற்றுக் கொண்டிருக் கிறேன் நான். அனாதைகளாகி விட்ட குழந் தைகளையும் முதியோர்களையும் பராமரிக்க வழிசெய்ய வேண்டும். ஆதரவற்ற குழந்தை கள் சிலரை இங்கே அழைத்து வந்து அனாதை இல்லங்களில் சேர்க்க, ஏற்பாடு செய்யும் எண்ணமும் இருக்கிறது.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

---

***"நாங்கள் ஆட்சிக்கு வந்தால் ஒரு தொகுதிக்கு ஒரு எம்.பி. என்றிருப்பதை மாற்றி நான்கைந்து எம்.பிக்கள் இருக்கும்படி சட்டத்தை மாற்றுவோம் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்."***

***– பி. நிர்மலாதேவி***





# ஆஸ்துமாவா! எஸ்னோபிலியாவா! சைனஸா! காசநோயா!
# இனி கவலையே வேண்டாம்!



## அறிகுறிகள்

மூக்கில் நீர்வடிதல், சளி, தும்மல், இருமல், கபம், மூக்கடைப்பு, மூச்சுத் திணறல், ஒவ்வாமை, பலஹீனம், உடல் மெலிதல், பசியின்மை, உடல் நடுக்கம், மலச்சிக்கல் போன்றவைகள் இருப்பின் ஆஸ்துமா, எஸ்னோபீலியா, காசநோய், சைனஸ் போன்றவைகளாக இருக்கலாம்.

## உணவு :

சாதாரண சைவ உணவு சாப்பிடுவதில் ஆஸ்துமா நோயாளிகளுக்கு எவ்வித கெடுதலும் கிடையாது. இரவு நேர உணவை முடிந்த மட்டும் அரைவயிறு உணவாக உண்பது நலம். அதிக கார வகை உணவுகளையும் தவிர்த்தல் நல்லது. அதிக காரவகை உணவுகளை உண்ணும்போது மலச்சிக்கல் ஏற்பட்டு அதனாலும் ஆஸ்துமா தீவிரமடைய வழிவகுக்கும். அசைவ உணவுகளை குறைப்பது மிகவும் நல்லது. மற்றபடி பச்சை தண்ணீர் நிறைய குடிப்பது மிகவும் சிறந்தது.

## தவிர்க்க வேண்டியவை

டீ, காபி போன்ற பானங்கள், சர்க்கரை உபயோகித்த உணவுப் பொருட்கள், உடலில் குளிர்ச்சி தன்மை ஏற்படுத்தக் கூடிய காய்கறி, பழவகைகள், அடிக்கடி ஆங்கில மாத்திரையின் உபயோகம் முதலானவைகளை அறவே தவிர்த்தல் மிகவும் அவசியமாகும். புகை காற்று படும்படியாக தொழிற்சாலைகளில் வேலை பார்ப்பது போன்ற சூழ்நிலைகளையும் தொழிற்சாலை புகை அதிகமிருக்கும் இடங்களில் வசிப்பதையும் முடிந்த மட்டும் தவிர்த்தல் வேண்டும். புகை பிடித்தல், மது அருந்துதல் தவிர்க்கவும்.

## காரணம் :

சிறுநீரகங்களால் பிரித்தனுப்ப முடியாத இத்தகைய அழுக்குகள் அதிகப்படியான நாட்கள் தொடர்ந்து இரத்தத்தில் தங்க நேர்ந்தால் உடலின் வெப்பநிலையில் மாறுதல் ஏற்பட்டு உடல் குளிர்ச்சி தன்மையடையும். இத்தகைய நேரத்தில் இரத்தத்தில் தண்ணீரின் அளவும் அதிகரித்து முகம் வீங்கிக் காணப்படும். தலை, கழுத்து, முகம் போன்ற பாகங்களில் வலி தோன்றக்கூடும். இதனை சைனஸ் என்றழைக்கின்றனர்.

நுரையீரல் தசைப்பகுதிகளுக்கு போதிய சக்தி கிடைக்காததால் அவைகள் சரியான திறனோடு இயங்க முடியாமல் இருக்கும்போதும், நரம்பு மண்டல இயக்கம் சரியாக நுரையீரலின் இயக்கத்தில் ஈடுபடாமலும் இருக்கும் சமயத்தில் மூச்சு வாங்குதல் ஏற்படும். இதனை ஆஸ்துமா என்றழைக்கின்றனர். நரம்பு மண்டல இயக்கத்தில் ஏற்படும் மாற்றத்தினாலோ, சிறுநீரகப் பகுதிகளில் ஏற்படும் கோளாறுகளாலோ, மூச்சுத்திணறல், மூக்கடைப்பு, மூக்கில் நீர் வடிதல், தும்மல், இருமல், கபம், பீனிசம் போன்றவை ஏற்படுகின்றன. இரத்தத்தில் அசுத்தம் ஏற்படும்போது உடலின் எதிர்ப்பு திறன் படிப்படியாக குறைவடையும். உடலில் எதிர்ப்பு சக்தி குறைவடையும் போது நுரையீரல் தசைகளும் வலுவிழந்து காணப்படும். அசுத்தக் காற்று, புகை, தூசி போன்றவைகள் காற்றின் மூலம் நுரையீரலுக்குள் செல்லும் போது மூச்சுத் திணறல், தொடர் தும்மல் ஆகியவை உடனடியாக ஏற்படும். இதையே (Dust Allergy) அலர்ஜி என்கின்றனர்.

## மூலிகை மருத்துவம் :

வேப்பிலை, ஆடாதொடை, அருகம்புல், வில்வம், கீழாநெல்லி, ஓமவல்லி, தூதுவளை, துளசி, தும்பை முதலானவைகளை உலர்த்தி பொடி செய்து சம அளவில் கலந்து வைத்துக் கொள்ளவும். இக்கலவையிலிருந்து 1 டீ ஸ்பூன் பவுடரை 1 டம்ளர் தண்ணீரில் கலந்து காலை உணவுக்கு அரை மணி நேரம் முன்னதாகவும் பின் அதே அளவு கலவை தயார் செய்து மதியம், இரவு உணவுகளுக்கு முன்பாக குடிக்கவும்.

**பயிற்சி :** தினமும் காலையில் மூச்சுப் பயிற்சி செய்தல், தினமும் குறைந்தது ஒரு மணி நேரமாகிலும் சூரிய ஒளியில் இருப்பது, மாலை நேரங்களில் பூங்காக்கள், பயிர்கள் நிறைந்த வயல்வெளிகள் போன்ற இடங்களில் அமர்ந்து ஆக்ஸிஜன் நிறைந்த காற்றினை சுவாசிப்பதும் மூச்சுத்திணறலை குறைக்க வழி வகுக்கும்.

**குறிப்பு :** தற்போது ஆங்கில மாத்திரைகளை உபயோகித்து கொண்டிருக்கும் நோயாளிகள், மூலிகை மருந்துகளை உபயோகப்படுத்தத் தொடங்கி குறைந்தது 1 மாதம் வரை பாதி அளவு ஆங்கில மாத்திரைகளை உபயோகித்துக் கொள்ளவும். ஏனெனில் மூலிகை மருந்துகள் உடலில் சேர குறைந்தது 20 நாட்களாவது தேவைப்படும். இரண்டாம் மாதம் முதலாக அலோபதி மருந்துகளை முழுவதுமாக நிறுத்திவிட்டு மூலிகை மருந்துகளை மட்டும் உபயோகிக்கலாம்.





*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*


தலைமை முகவரி : **Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்**

P.B. No: 30, No: 3, திருநாத முதலி நகர், காவேரி எதிரில், திருப்பத்தூர் (N.A.A) 635 601 ✆ 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8 ✆ 6424285, 6427638


**அறிவிப்பு** சென்னை, வேலூர், காஞ்சீபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர் ஓசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைப்பேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம்-விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்

**குறிப்பு** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 25 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

7 & 8-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589

18 & 19-ந் தேதி-புது டெல்லி: காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, ✆: 5717126, 5723851

● டெல்லி பிச்சைக்காரர்கள் இருவருக்கு அடித்தது யோகம். அன்னையின் இல்லத்திலிருந்து தமக்காக அரசு ஒதுக்கியிருக்கும் லோதிரோட் இல்லத்துக்குச் சென்று கொண்டிருந்தார் பிரியங்கா. சாதாரணமாக பிரியங்கா செல்லும் பாதையிலுள்ள ஈ, எறும்புகளைக் கூட விரட்டியடித்து விடுவார்கள் பாதுகாப்புப் படையினர். இருந்தும் எப்படியோ பிரியங்கா செல்லும் பாதையில் இரண்டு பிச்சைக்காரர்கள் நுழைந்து விட்டார்கள். அவர்களைப் பார்த்த பிரியங்கா உடனே தமது காரை நிறுத்தச் சொன்னார். காரிலிருந்து இறங்கி, அந்தப் பிச்சைக்காரர்களிடம் விவரம் விசாரித்திருக்கிறார். பயந்து அலறிய அவர்களிடம், "உங்கள் நல்வாழ்வுக்கு என்னால் இயன்றதைச் செய்கிறேன்!" என்று சொல்லிவிட்டுச் சென்றிருக்கிறார். உடனே டெல்லி காங்கிரஸ் முதல்வர் ஷீலா தீட்சித்துக்குப் பறந்தது தொலைபேசி உத்தரவு. அப்புறமென்ன! அடுத்த 24 மணி நேரத்திற்குள் அந்த இரண்டு பிச்சைக்காரர்களுக்கும் எஸ்.டி.டி., பி.சி.ஓ. பூத்கள் ஒதுக்கப்பட்டு விட்டன. டெல்லி பூராவும் பிரியங்காவின் கருணை உள்ளம் பற்றித்தான் பேச்சு. இதனால் இனி பிரியங்கா போகும் வழியில் கோரிக்கை மனுக்களோடு கூடப் போகும் மக்களை எப்படித் தடுப்பது என்கிற தலைவலியில் மூழ்கியிருக்கின்றனர் பாதுகாப்புப் படையினர்.

• பிரியங்கா



• முலாயம் சிங்

● கிரீடம் பறிக்கப்பட்ட உ.பி. ராஜா கல்யாண்சிங், தேவே கௌடா, சந்திரசேகருடன் அடிக்கடி பேச்சுவார்த்தை நடத்துகிறார் என்பது பழைய செய்தி. வாஜ்பாயின் விரோதியான விச்வஹிந்து பரிஷத்தின் வினய் கட்யாருடனும் கலந்து பேசிக் கொண்டிருக்கிறார் என்பது புதுச்செய்தி. வாஜ்பாயின் ஆட்சி ஒன்றரை ஆண்டுகளுக்குத்தான் ஓடும் என்று கட்டியம் கூறியவர், கட்யார். இப்போது சிங்கும் அவருடன் சேர்ந்து கொண்டிருக்கிறார். மீண்டும் ராமர் கோயிலை அரசியல் களமாக்க வேண்டும் என்பதுதான் இருவரின் திட்டமாம். இதனால் எதிரணியினர் கொஞ்சம் குஷியாகியிருக்கின்றனர்.

## மீண்டும்

● லாலு பிரசாத் யாதவும் முலாயம்சிங் யாதவும் சம்பந்தியாவதன் மூலம் அரசியல் அணியை பலப்படுத்துவார்கள் என்கிற செய்தி பொய்யாகி விட்டது. முலாயமின் மகன் தாலி கட்டப் போவது டிம்பிள் என்கிற ராணுவ அதிகாரியின் மகளுக்கு. இதற்காக ஒரு விருந்து வைத்த முலாயம், சோனியா காந்தியை மட்டும் அழைக்கவில்லை. காரணம் கேட்ட



• மம்தா பானர்ஜி



• கல்யாண்சிங்

பத்திரிகையாளர்களிடம், "அவர் அந்நியர் மட்டுமல்ல; எனக்கு அறிமுகமே ஆகாதவர்!" என்று ஒரு போடு போட்டார் முலாயம்!

● பிரதமரின் முதன்மைச் செயலாளராக இப்போது புதிதாக நுழைந்திருக்கும் பிராஜேஷ் மிஷ்ரா, தாம் அத்வானியை விட சக்தி வாய்ந்தவர் என்று காட்டிக் கொள்வதற்காகப் படாதபாடு பட்டுக் கொண்டிருக்கிறார். "அத்வானியோடு யார் யார்தான் மல்லுக்கு நிற்பது என்கிற விவஸ்தையே இல்லாமல் போய் விட்

# அயோத்தியா? உஷார்!

டது என்பதுதான் சோகம்!" என்கிறார்கள் அத்வானி குழுவினர்.

● எம்.எம். ராஜேந்திரன் ஒரிசா கவர்னரானதில் மம்தா பானர்ஜி பெரும் பங்கு வகித்தாராம். ஒரிசாவுக்கு புதிய ஆளுனரை நியமனம் செய்யப் போகிறது என்பதையறிந்த சோனியா, மம்தாவைத் தொடர்பு கொண்டு, நியமிக்கப்படப் போகும் ஆளுனர் காங்கிரஸின் நண்பராய் இருக்கும்படி பார்த்துக் கொள்ளச் சொன்னாராம். அப்போதுதான் ஒரிசாவில் பிரச்னை வராமலிருக்கும் என்பதையும் எடுத்துச் சொன்னாராம். அதன் விளைவாகத்தான் எம்.எம். ராஜேந்திரனை நியமிக்க வேண்டுமென்று வாஜ்பாயிடம் வாதாடினாராம் மம்தா. இது ஒருபுறமென்றால், மறுபுறம் எம்.எம். ராஜேந்திரன் நியமனத்தில், ஆர்.எஸ்.எஸ். வட்டாரம் கடும் அதிருப்திக்குள்ளாகியிருக்கிறது.

● மேற்கு வங்கத்தில் வரப் போகும் சட்டமன்றத் தேர்தலில் சோனியா காங்கிரஸுடன் மம்தா காங்கிரஸும் இணைந்து போட்டியிடப் போவதாக ஒரு செய்தி. இதை உறுதிப்படுத்துவதைப் போல மார்க்சிஸ்ட் கட்சியுடன் அதிருப்தி கொண்டுள்ள பார்வர்டு பிளாக் கட்சியுடன் பேச்சுவார்த்தைகளைத் துவக்கியிருக்கிறார் மம்தா. இதனால் பி.ஜே.பி. கூடாரத்தில் ஒரு கலக்கமும் ஏற்பட்டிருக்கிறது. "வேண்டுமானால் பாருங்கள் தமிழகத்தில் மூப்பனாரும் மே. வங்கத்தில் மம்தாவும் மறுபடியும் எங்கள் கட்சியில் வந்து இணையத்தான் போகிறார்கள்!" என்று சத்தியம் செய்யாத குறையாகச் சொன்னார் ஒரு இ.காங்கிரஸ் பிரமுகர்.

● டாக்டர் ஐயாவின் சவுக்கு மகிமை டெல்லி வரை பரவி விட்டது. பா.ம.க அமைச்சர் அலுவலகங்களுக்குச் செல்லும் பத்திரிகையாளர்கள், "இங்கே சவுக்கு ஒன்றும் தொங்கவில்லையே, இவர்களுக்கு எப்போது சவுக்கடி?" என்று அதிகாரிகளிடம் கிண்டலடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

— இந்த்ரப்ரஸ்தன்

# வட்டமேஜை



# சிந்திக்க வைத்தார் சிதம்பரம்!

✉ இரட்டை சூறாவளி, குறட்டை அரசாங்கம், பிணக் குவியல்களிடமும் பணம் தேடப் பார்க்கும் சுருட்டல் பேர்வழிகளின் கைவரிசை. இவற்றின் நடுவே சிக்கித் திணறிக் கொண்டிருக்கும் ஓரிசா மாநில மக்கள் படும் அவலத்தைச் சுட்டிக்காட்டிய விதம் கண்ணீர் மல்க வைத்தது.

நெல்லையப்பபுரம், டி. செல்வன்.

✉ வரிகள் அதிகம் போடுவதன் மூலம் வரி ஏய்ப்புதான் நடக்கும். அரசு செலவைக் கட்டுப்படுத்த வேண்டியது அவசியம் என்று ப.சிதம்பரம் கூறிய கருத்து அருமையானது மட்டுமல்ல; சிந்திக்க வைக்கக்கூடியதாகவும் இருந்தது.

கோயமுத்தூர், ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

✉ எல்லா வங்கிகளையும் தனியார் கையில் ஒப்படைக்க வேண்டிய அவசியமில்லை. வேண்டுமானால் ஸ்டேட் பேங்கை மட்டும் அரசே வைத்துக் கொள்ளலாம் என்று கூறியிருக்கிறார் ப. சிதம்பரம்! ஏன் இந்தப் பாகுபாடு? ஆரம்ப காலத்திலிருந்தே ஸ்டேட் பாங்கை ஒருவிதமாகவும் மற்ற பாங்குகளை மாற்றாந்தாய் குழந்தைகள் போலவும் நடத்துவது முறையா? அரசின் கணக்கு வழக்குகள் எல்லாம் ஸ்டேட் பேங்கில் இருக்கின்றன. அதற்கு அவர்கள் ஒரு பைசா கூட வட்டி கொடுக்க வேண்டியதில்லை. அந்தப் பணத்தைக் கொண்டு கடன் கொடுத்து வரும் வட்டி முழுவதும் ஸ்டேட் பாங்கிற்கே சொந்தம். அந்த அபரிமிதமான வருமானத்தைக் கொண்டு மீதி நஷ்டங்களை ஈடு செய்துவிட்டு லாபமும் காட்டுகிறார்கள். ஏன் அதுபோல கவர்ன்மெண்ட் கணக்குகளை எல்லா பேங்குகளுக்கும் சமமாகப் பிரித்துக் கொடுக்க வேண்டியதுதானே? அவ்வாறு செய்தால் எந்த வங்கியும் நஷ்டத்தில் ஓடாதே. செய்வார்களா?

சென்னை - 59, ரோசாரியா ரவிச்சந்திரன்

✉ ஒரு கோணத்தில் சிதம்பரம் கூறும் தனியார் மயமாக்கலுக்கு நான் ஆதரவு தெரிவிக்கிறேன். பாகிஸ்தான் அரசு செய்ததைப் போல வங்கிகளில் கடன் வாங்கி, கட்டாத அரசியல்வாதிகள்/மற்றவர்கள் பெயர்கள் இங்கே இந்தியாவிலும் வெளியிடப்பட்டு அவர்கள் மேல் கடும் நடவடிக்கை எடுக்கப்படும் பட்சத்தில், தனியார் மயமாக்கலுக்கு சிதம்பரம் என்ன, வங்கி ஊழியர்கள் அனைவரும் ஆதரவு தருவார்கள் என்பது உறுதி.

கும்பகோணம்-1, எஸ். உப்பிலி

✉ சுஜாதாவின் 'முதல்வன்' அனுபவங்கள் அவருடைய சிறுகதை ஒன்றைப் படித்த திருப்தியை அளித்தது. இந்தக் கோணத்தில் அவரிடமிருந்து பதில்களை வரவழைத்த கல்கியின் கேள்விகள் சூப்பர்.

சென்னை - 73, ப்ரியக்குமார்.

✉ மதப் பிரசாரம் செய்பவர்கள் இயேசுவின் நற்செய்தியை மட்டும் பரப்பினால் பிரச்னை ஏதும் இல்லை. அகத்தியர் இயேசுவின் சீடர் என்றும், சபரிமலை இருமுடியை பாவ மூட்டை என்றும் வர்ணித்து, பிட் நோட்டீஸ் வெளியிடுகையில், உண்மை நட்பைப் புரிந்து கொள்ளாதது வார்த்தைச் சித்தர் வலம்புரிஜான்தான் என்பது எல்லோருக்கும் புரியும்!

பொன்மலை. ஆர். பிரகாஷ்.

✉ கற்பழிப்புக்கு மரண தண்டனை விதிக்க வேண்டும் என்ற கருத்துக் கணிப்பு 80% உறுதியாகியுள்ள நிலையில், இது விஷயத்தில் சட்டத்திருத்தம் வேண்டும் என்ற தராவின் அறைகூவல் மிகவும் ஏற்புடையதாக இருந்தது.

திருமருகல், கண். சிவகுமார்.

✉ யோகியின் 'ஞாபகங்கள் தீயாகும்' சிறுகதை மனத்தை நெகிழ வைத்ததுடன், அதில் நாற்காலி போட்டு உட்கார்ந்தே விட்டது.

விழுப்புரம், வை. வெங்கடேசன்.

✉ சுப்ரபாரதிமணியனின் 'சாயத்திரை' நாவலை நூலகத் துறை நிராகரித்து விட்டதைக் கண்டித்து, கமி எழுதியிருப்பதற்குப் பாராட்டுக்கள். இதுபோன்ற அக்கிரமங்களைத் தொடர்ந்து கண்டித்துப் பதிவுசெய்யுங்கள்.

கோயமுத்தூர், ஃபிர்தௌஸ் ராஜகுமாரன்.

✉ 'குட்லக்' கல்யாணத்தின் அனுபவங்கள் மிகவும் சுவையாக இருந்தன. அதைவிட அவர் இதுவரை ஒரு சினிமா கூடப் பார்த்ததில்லை என்ற விவரம் ஆச்சர்யமாக இருந்தது.

திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.






1999 டிசம்பர் 5
பிரமாதி கார்த்திகை 19
மலர் : 58
இதழ் : 19

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## வாஜ்பாயின் விரிவாக்க விளையாட்டு!

நான்கு புதிய அமைச்சர்களைத் தேர்வு செய்து தமது அமைச்சரவையை விரிவாக்கியிருக்கும் பிரதமர், அவர்களுள் ஒருவருக்குப் புதிய இலாகாவை உருவாக்க வேண்டியிருந்திருக்கிறது. சுக் தேவ் சிங் என்ற அகாலி தள அமைச்சருக்கு வழங்கப்பட்டுள்ள 'வொர்க்ஸ் அண்ட் எஸ்டேட்ஸ்' என்ற இந்த இலாகா, ஏற்கெனவே உள்ள துறைகளிலிருந்து பிய்த்து எடுக்கப்பட்ட பகுதிதானே தவிர, அவசியம் கருதி ஏற்படுத்தப்பட்ட பொறுப்பு அல்ல.

இதே ரீதியில்தான் ஏற்கெனவே உள்ள இலாகாக்களைப் பிரித்தும் வகுத்தும் பெயர் மாற்றியும் கூட்டணி ஆட்சியின் பலதரப்பு அமைச்சர்களையும் திருப்திப்படுத்த முயன்றிருக்கிறார் பிரதமர்.

அனைத்துப் பிரிவினரையும் மகிழ்விப்பதற்காக பிரதமர் பட்டிருக்கும் கஷ்டங்கள் அரசியல் ரீதியாகவும் சரி, நிர்வாக ரீதியாகவும் சரி, பயனளிக்கப் போவதில்லை.

இத்தனை உறுப்பினர்கள் கொண்ட அமைச்சரவையில், அனைத்து அமைச்சர்களின் செயல்பாடுகளையும் கண்காணித்து வருவது பிரதமருக்குச் சாத்தியமில்லை.

ஒரு இலாகாவைப் பிரித்து இரண்டு, மூன்று என்று ஆக்குவது அதிகாரத்தைப் பரவலாக்குவதற்குப் பதிலாகப் பொறுப்புணர்வைத்தான் நீர்த்துப் போகச் செய்யும்.

போதாக்குறைக்கு செலவுகளும் ஏகமாக அதிகரிக்கும். ஒவ்வொரு புதிய இலாகாவுக்கும் 'குட்டி போட்ட' இலாகாவுக்குமாக சில பல கோடிகளை எடுத்து வைக்க வேண்டும். இந்தச் செலவுகளெல்லாம் வீட்டுச் செலவு போல் மாதாந்தர செலவுகள்! தவிர்க்கவே முடியாது.




'ஏற்கெனவே விண்ணளவு உயர்ந்து கொண்டிருக்கும் நிர்வாகச் செலவை இழுத்துப் பிடி, குறை,' என்று திட்டக் கமிஷன், நிதி கமிஷன் என எல்லா அமைப்புகளுமே வற்புறுத்தி வருகின்றன. பிரதமரோ, குறைப்பதற்குப் பதிலாகக் கூட்டுவதற்குத்தான் வழி செய்கிறார்.

அரசியல் ரீதியாகவாவது பிரதமருக்கு இந்த அமைச்சரவை விரிவாக்கம் உதவுமா என்றால், அதுவும் இல்லை. ஹெக்டே விடுபட்டதில் வெளிப்படையாக முணுமுணுப்பு. பாஸ்வான் எதிர் பார்த்த தகவல் தொழில்நுட்பத் துறை பிரமோத் மகாஜனுக்குப் போய் விட்டதில் ஜனதாதள காரருக்கு ஏமாற்றம்.

'வளைந்து கொடுக்க' மறுத்த நிதிஷ் குமார் விவசாயத் துறைக்குத் தூக்கியடிக்கப்பட் டிருக்கிறார். இதனால் அதிருப்தியே விளைந்திருக்கிறது.

கூட்டணி ஆட்சியில் அனைத்துக் கட்சிகளையும் அரவணைத்துச் செல்ல வேண்டும் என்பது முக்கியம்தான். ஆனால், அரசியல்ரீதியான லாபங்களுக்காக நிர்வாகத்தைச் சீர்குலைத்துச் செலவைக் கூட்டுவது வாக்காளர்களுக்குச் செய்யும் துரோகம்.

செலவுகளைக் கட்டுப்படுத்துவது, குறைப்பது, தகுதியிருப்பவர்களுக்கு மட்டுமே பொறுப்புத் தருவது என்ற கொள்கையுடன் செயல்படும் அளவுக்கு வாஜ்பாயிடம் இன்று மெஜாரிடி இருக் கிறது. அந்த வலிமையை அவர் பயன்படுத்திக் கொள்ளாமல் திண்டாடுவதைப் பார்க்கத்தான் பரிதாபமாயிருக்கிறது.

பெரிய ஆபத்து என்னவென்றால், நாளை ஒரு கட்சி தனி மெஜாரிடியுடன் ஆட்சிக்கு வந் தால் கூட அக் கட்சியின் எம்.பிக்கள் அனைவருமே ஜம்போ அமைச்சரவை நிறுவி, தங்களுக் கும் மந்திரி பதவி தரப்பட வேண்டும் என்று எதிர்பார்ப்பார்கள்!

## முஷரஃபின் தனிமனித வன்மம்!

தென்னாப்பிரிக்காவில் நடந்த காமன்வெல்த் உச்சி மாநாட்டில் பாகிஸ்தானின் ராணுவ ஆட்சி காட்டமான விமர்சனத்துக்குள்ளாகியிருக்கிறது. காமன்வெல்த் அமைப்பிலிருந்தே




பாகிஸ்தான் நீக்கப்பட்டிருக்கிறது.

அதன் பிறகும் பர்வேஸ் முஷரஃப், எடுத்தேன் கவிழ்த்தேன் என்று செயல்பட்டு வருவது அவரது கண்மூடித்தனமான சர்வாதிகாரப் போக்கையே உணர்த்துகிறது.

நவாஸ் ஷரீஃப் பேரில் முஷரஃப் அரசு சுமத்தியுள்ள குற்றச்சாட்டு ஒருவேளை நியாயமானதாகக் கூட இருக்கலாம். ஷரீஃப் உத்தமபுத்திரர் அல்ல என்பதையும் நமது அனுபவத்தால் உணர்ந்துள்ளோம்.

ஆனால், ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் அரசைக் கலைத்து விட்டு, அதனிடத்தில் ராணுவ ஆட்சியை நிறுவியுள்ள ஒருவர், இந்த வழக்குகளைத் தார்மிக பலத்துடன் நடத்த முடியாது.

போதாக்குறைக்கு, ஷரீஃப் குடும்பத்தாரை தேடிப் பிடித்துக் கொடுமைப்படுத்துவதன் மூலம் முஷரஃப் தமது தனிப்பட்ட விரோதத்தை அழுத்தமாக நிரூபித்து வருகிறார்.

ஷரீஃப் பேரிலுள்ள வழக்கு நடக்கட்டும்; ஆனால் அது தர்ம நியாய அடிப்படையில் பாரபட்சமின்றி நேர்மையாக நடத்தப்படுகிற வழக்காக இருக்குமா என்ற சந்தேகம் எழுந்துள்ளது. தீர்ப்பு வெளியாகிற சமயத்திலாவது பாகிஸ்தானில் ஜனநாயகம் மீண்டும் மலர்ந்திருக்குமேயானால் அந்தத் தீர்ப்புக்கு பலம் இருக்கும்.

ஆனால், முஷரஃப் தமக்கும் தமது நாட்டுக்கும் நன்மை சேர்க்கக்கூடிய பாதையைத் தேர்ந்தெடுப்பவராகத் தெரியவில்லை.

உலக நாடுகளின் கண்டனத்தையும் பொருளாதாரத் தடைகளையும் விலைக்கு வாங்கும் பாதையில் அவர் சென்று கொண்டிருக்கிறார்.

பாதையின் முடிவில் பர்வேஸ் முஷரஃப் தொலைந்துதான் போவார். தன்னிறைவில்லாத சிறிய நாடான பாகிஸ்தானும் இருண்டுதான் போகும்.

தனிமனித வன்மத்தினால் தேசம் காவு கொடுக்கப்படுகிற நிகழ்ச்சி பாகிஸ்தான் சரித்திரத்தில் மீண்டும் பதிவாகிக் கொண்டிருக்கிறது. ●

# மௌன குருவே, எமை ஆண்ட நீலகண்டனே!

குருர் பரமமா குருர் விஷ்ணு :
குருர் தேவோ மஹேச்வர:
என்ற சுலோகத்தை அனைவரும் அறி வார்கள்.

சிவ பெருமானின் வடிவங்களில் மிகவும் போற்றப்படுவது இரண்டு விதத் தோற்றங் கள். ஒன்று நடராஜ மூர்த்தியின் வடிவம். அண்ட சராசரங்களையும் இயக்கும் கோலம். இது அவருடைய அசைவுகளை, இயக்கத்தை, வலிமையை, முத் தொழில் களையும் செய்து, தான் பிறக்கச் செய்த ஜீவனுக்கு தன்னை முதலில் மறைத்து, மாயாவலையில் சிக்க வைத்துப் பின்னர் அனுக்ரஹம் செய்து மாயையிலிருந்து விடுவித்துத் தன்னுள் சேர்த்துக் கொள்ளும் கோலம். இயக்கமே நடராஜ வடிவம். ஆடல் வல்லானின் உடுக்கையிலிருந்து நாதம் பிறந்து ஒலி வடி வங்களாகி மொழிகளாயிற்று. பேச்சு பிறந் தது.

இதற்கு நேர்மாறாக, இயக்கம் அற்ற நிலையில் மோனத் தவம் செய்துகொண்டு, பேச்சு, ஒலி, அசைவுகள் அடங்கி ஸனகாதி முனிவர்களுக்கு மௌனத்தையே உபதேச மாக்கிக் காட்டிய வடிவம் ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தியின் அமர்ந்த கோலம். மௌன குருவாகச் சின் முத்திரையினாலேயே ஜீவ ப்ரும்ம ஐக்கியத்தை விளக்கிய அருள் வடிவம்.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியே குருவாக அமர்ந்து அறிவை, ஞானத்தைப் போதிக்கும் தலம்தான் ஆலங்குடி என்று வழங்கப்படும் அரிய தலம்.

"இந்த ஜாதகனுக்குக் குரு பலன் வந்துவிட்டது. இனிமேல் கல்யாணம் ஆவதைத் தடுக்க முடியாது!" என்று சொல் வதைக் கேட்டிருக்கிறோம்! சுபகாரியங் களுக்கு குரு பகவானின் கடைக்கண் பார்வை வேண்டும் என்பதை எல்லாரும் ஒப்புக் கொள்வார்கள். வியாழன், சுரகுரு, பிருஹஸ்பதி, தேவகுரு, ஜகத்ரயகுரு (மூவுலகங்களுக்கும் ஆசாரியராக இருப்பவர்) ஸ்ரீமான்; ஸர்வக்ஞன் என்றெல்லாம் குரு பகவானை அழைக்கிறார்கள்.

வியாழ பகவான், ஆங்கிரஸ் மகரிஷிக்கும் சிரத்தா தேவிக்கும் மகனாகப் பிறந்தார். (வசுதாதேவி என்றும் சொல்கிறார்கள்)

ஆங்கிரஸ் முனிவருக்கு ஆறு பிள்ளை கள். பிருஹஸ்பதி என்கிற குருதான் கடைக் குட்டி!

இவர் தர்மராஜனான யமனுக்கே தருமத் தைப் போதித்தவர். தேவர்கள் இவரைத் தங்களுக்குக் குருவாக இருக்க வேண்டி னார்கள்.

பிருஹத் என்றால் பெரிது என்று பொருள். பிருஹதீசுவரனான சிவன்தானே பெரிய பொருள். அதைக் காட்டியவர் என்பதால் பிருஹஸ்பதி என்று பெயர் வந் தது எனலாம். உள்ளத்தில் உள்ள பெருஞ்

• ஆலங்குடி






சோதியான பரஞ்சோதியைக் காட்டித் தருபவரே குரு. இருளை நீக்கி ஒளியைக் காட்டுபவர்.

அதனால்தான் கலைகளைக் கற்றுத் தரும் ஆசிரியர்களையும் குரு என்று போற்று கிறோம். கலை என்ற விளக்கை புத்தி என்ற வீட்டில் ஏற்றி வைத்து நமது புத்தியைப் பிரகாசிக்கச் செய்பவர் குரு. கலைகளின் மூலம் நாம் அடைவது என்ன? ப்ரும்மானந்தம் என்று சொல்கிற ரஸானுபவம்தானே.




ஸ்ரீ குருபகவான்
ஆலங்குடி



ரஸானுபவம் என்பதே தன்னை மறந்து ஒரு உன்னத உணர்வில், எழுச்சியில் லயிப்பது தானே.

அ ஆ என்று முதல் வகுப்பில் கற்றுத் தருகிற ஆசிரியரும் குருதான். கல்வி புகட்டும் நிலையில், ஆசிரியர் வியாழ பகவானின் அம்சமே ஆகிறார்.

வியாழக் கிழமையைக் குரு வாரம் என்று கூறுகிறோம். சுப காரியங்களுக்கு ஏற்ற நாள். குருவின் அருள் பெறக்கூடிய நாள்.

குரு பகவானுக்கு பல பிரார்த்தனைத் தலங்கள் இருக்கின்றன. மயிலாடுதுறையிலிருந்து 10 கி.மீ தூரத்தில் திட்டை என்று ஒரு ஊர் இருக்கிறது. சென்னைக்கு அருகில் உள்ள திருவலிதாயம் என்ற ஊரும் பிருஹஸ்பதி க்ஷேத்திரம் என்று சொல்வார்கள்.

முக்கியமாக முருகப் பெருமானுடைய ஆறு படை வீடுகளில் ஒன்றான திருச்செந்தூர் பிருஹஸ்பதி தலம் என்றும் சொல்வதுண்டு. திருச்செந்தூரில் முருகனே பிருஹஸ்பதி ரூபமாக வீற்றிருப்பதாக ஐதீகம். எனினும் நவக்கிரஹ க்ஷேத்ரங்கள் வரிசையில் இடம் பெறுவது பரமசிவனே தக்ஷிணா மூர்த்தி ரூபத்தில் குருவாகக் காட்சி தரும் ஆலங்குடிதான்.

ஆலங்குடி கும்பகோணத்திலிருந்து மன்னார்குடி போகும் வழியில் 17 கி.மீ தூரத்தில் இருக்கிறது. தேவாரத்தில் "எழிலார் இரும்பூளை" என்று குறிப்பிடப்படுகிறது. ஒரே ஆலமரக் காடாக இருக்கும் என்று எண்ணிக் கொண்டு போனால் விளைநிலங்களும், நீர்க் குளங்களும்தான் தென்பட்டன. ஆல மரத்தைக் காணவில்லை. ஐந்து நிலைக்

**ஆனந்தி**

கோபுரத்துடன் கோவில் தென்பட்டதும்,

"அழிவில்லாத பொன்மயமான வட விருக்ஷத்தின் கீழ் நிலைத்திருப்பவரே!" ("அக்ஷய சுவர்ண வட வ்ருக்ஷ மூல ஸ்திதே") என்று தீக்ஷிதருடைய சங்கராபரண கீர்த்தனையில் வரும் வரிகளை நினைத்துக் கொண்டு கோபுர வாசலில் நுழைந்து உள்ளே செல்கிறோம். ஆலயத்தைச் சுற்றி அகழி இருக்கிறது. அமுத புஷ்கரணி என்று பெயர். வரலாறு உறுதியாகத் தெரியவில்லை. ஆனால் சம்பந்தர் பாடல் இருப்பதால் மிகத் தொன்மையான ஆலயம்.

கலங்காமல் காத்த விநாயகரை முதலில் வணங்கி விடுவோமே. நமது கலக்கங்களையெல்லாம் தீர்த்து வைப்பார்.

முதல் பிராகாரத்தில் தேவியின் ஆலயம் இருக்கிறது. அங்கே தரிசித்து விட்டு சுவாமி கோவிலில் வலம் வந்தால் அரிய பல சிற்பத் திருமேனிகளைக் காண்கிறோம். ஒவ்வொரு சிற்பமும் அழகு வடிவமாக இருப்பது அவசரத்திலும் கவனத்தை ஈர்க்கிறது.

சுந்தரமூர்த்தி ஸ்வாமியின் அழகான கோலத்தைக் கண்டு மெய்மறந்து நிற்கிறோம். எம்பிரானின் தோழர். சிவபெருமானின் சுந்தர வடிவத்தையே பெற்றவர். அவருடைய எழிலுக்குக் கேட்பானேன்.

ஒரு கதை கேட்போமா? சுந்தரமூர்த்தி நாயனார் ஆலங்குடிக்கு வந்தபோது வெட்டாற்றில் பயங்கர வெள்ளம். ஆபத்சகாயர் என்ற பெயர் தாங்கிய இவ்வூர் ஈசன் ஓடக்காரனைப் போல உருவமெடுத்துக் கொண்டு வந்து பொற்காசுகள் பெற்றுக் கொண்டு இக்கரைக்கு அழைத்து வந்தார். ஆற்றின் மத்தியில் ஓடம் பாறையில் மோதி நொறுங்கிற்று. பிறகு ஈசனே அடியார்களைக் கரை சேர்த்தாராம். சுந்தரர் இந்தத் தலத்தில் குரு தக்ஷிணாமூர்த்தியிடம் உபதேசம் பெற்றதாகச் சொல்லப்படுகிறது.

இந்தத் தலத்தில் சிவபெருமானை வழிபட்டவர்கள் அனேகர். அஷ்டதிக்குப் பாலகர்கள் வழிபட்டார்களாம். அம்பிகையே வழிபட்ட ஸ்தலம். அம்பிகையின் பெயர் ஏலவார் குழலி.

குழலார்மொழியாள், மின் போல் மருங்குல் மடவாள், நற்றாள் குழல் நங்கை என்றெல்லாம் ஞானக் குழந்தையாகிய சம்பந்தரால் புகழப்படும் அன்னை.

இன்னொரு தல புராணக் கதை:

தோழிகளுடன் விளையாடிக் கொண்டிருந்தாள் பார்வதி தேவி. தோழிகள் பந்து வீசினார்கள். பார்வதி பிடித்து விடக் கூடாதென்று உயரே எறிந்து விட்டார்கள். வானத்தில் பொற் சக்கரத்தின் மீது வந்து கொண்டிருந்த சூரியன் பார்வதி தேவி பந்தைப் பிடிக்கக் கையைத் தூக்கியதைக் கண்டார். தன்னை நிற்கச் சொல்வதாக எண்ணி தேரை நிறுத்தி விட்டார். அவ்வளவுதான் காலச் சக்கரம் நின்று விட்டது. விதிகள் மாறிவிட்டன. இதைக் கண்ட சிவபெருமான் பார்வதியை சபித்து விட்டார். பார்வதி தேவி காசி ஆரண்யம் என்ற ஆலங்குடியில் வந்து தவம் செய்து சிவபெருமானை மீண்டும் அடைந்தாள். முசுகுந்த சக்கரவர்த்தியும் இங்கு வழிபட்டாராம்.

வடக்குப் பிராகாரத்தில் நவக்ரஹங்களும் காட்சி தருகின்றனர். ஆனாலும் இந்த ஊரில் குருவாக இருப்பவர் தெற்கு கோஷ்டத்தில் உள்ள ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியே.

அவரைச் சுற்றிலும் தாமரைப் பூ மயம். ஆலமர் செல்வனின் திருவடிக்கருகில் சனகாதி முனிவர்கள் மோனத் தவம் புரிகிறார்கள். சந்தனக் காப்பு சாத்தி மிக அழகாக அலங்காரம் செய்திருக்கிறார்கள். அர்ச்சனை செய்வோர், பிராகாரத்தில் விளக்குகள் ஏற்றுவோர், வாய்க்குள்ளேயே சுலோகம் சொல்லுவோர், குழந்தைகளைத் தூக்கிக் கொண்டு வருவோர் என்று கூட்டம். கம்பிகளுக்கு ஊடே புகுந்து வந்து தரிசனம் செய்ய வேண்டியிருக்கிறது. முப்பது பேரானாலும் ஒரே அர்ச்சனைதான். அர்ச்சகர் மளமளவென்று தேங்காய் உடைத்து, தீபாராதனை செய்து பிரஸாதத் தட்டுக்களைத் தருகிறார். வெளிப் பிராகாரத்தில் தரிசனம் தருவதால் நன்றாகத் தரிசனம் செய்து மனம் குளிர வேண்டிக் கொள்கிறோம். ஆதிசங்கரர் இங்கு வந்து குரு தக்ஷிணாமூர்த்தியை வழிபட்டதாகச் சொல்கிறார்கள்.

ஞானத்தின் வடிவமான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியே குருவாக இருந்து அருள்புரியும் இந்த தலத்தில் வியாழனன்று வழிபட்டால் ஞாபக சக்தி, நல்லொழுக்கம், சிறந்த கல்வி, நல்ல ஆசிரியராக இருக்கும் திறமை, கதாகாலக்ஷேபம் செய்யும் திறமை, பொறுப்பான உத்தியோகம் எல்லாம் கிட்டும்.

குருவின் நிறம் பொன் நிறம். வாகனம் மீன். தானியம் கடலை. (கொத்துக் கடலை). மலர் முல்லை. வஸ்திரம் மஞ்சள் ஆடை. மணி புஷ்பராகம். கடலையை வறுத்துப் பொடி செய்து அன்னத்தில் கலந்து நைவேத்தியம் செய்வது விசேஷம். பரீக்ஷை எழுதும் மாணவர்கள் கடலை தானம் செய்து

# ALL INDIA COUNCIL FOR MANAGEMENT STUDIES



29, Lazarus Church Road,
R.A. Puram, Chennai - 600 028.
Phone : 044-4956833/4933210,
Fax : 044-4952692/4933259.
E-mail:aiicas@hotmail.com

**SIX MONTHS DIPLOMA COURSES**

- International Business Management
- Business Organisation & Management
- Personnel Management & Industrial Relations
- Labour Welfare & Labour Laws
- Human Resources Development
- Financial Management
- Networking & Internet Application
- Management Information Technology
- Management Information System
- Computers in Office Management
- Computer Application
- Hospital Administration
- Teacher Training Education
- Educational Management
- International Safety Management
- Foreign Trade Management
- Hotel Front Office Operation
- Food & Beverage Management
- Housekeeping Operation
- Food Production Management
- Hire purchase & Leasing Finance

**ONE YEAR DIPLOMA COURSES**

- Business Management
- Business Administration
- Marketing Management
- Total Quality Management & QS 9000 ISO 9000
- Materials Management
- Export & Import Management
- Banking & Insurance Management
- Hotel Hospitality Management
- Catering Management
- Travel & Tourism Management

**AICOMAS** offers **SIX MONTHS** and **ONE YEAR DIPLOMA COURSES** by Correspondence. (Distance Education Programme) Six Months Diploma has 4 Written Papers and One Year Diploma has 8 Written Paper (Two Semester - Each Semester 4 papers)

**TOTAL FEES :** Rs 1900/- for One Year Payable in Two Instalments (Rs. 1000 & 900). Rs. 1000 - for Six Months.

**EXAMINATION :** Will be held at more than 60 Centers all over India.

**ELIGIBILITY :** Matriculation Passed or above - Minimum Age : 16 Years and above.

**APPLICATION AND PROSPECTUS :**
Send Rs. 15/- Stamped Envelope to the above Institute.

---

## "5 வருட இடுப்பு வலியிலிருந்து ஆப்ரேஷன் இன்றி குணமடைந்தேன்!!!"



ஸ்ரீமதி. லக்ஷ்மிஐயர்,
மேட்டூர்டேம் R.S.,
சேலம் மாவட்டம்,
தமிழ்நாடு.

கடந்த ஐந்து வருடங்களாக இடுப்பில் வலி இருந்து வந்தது. இதனால் குனிந்து நிமிரும் பொழுதும், சிறிது தூரம் நடக்கும் பொழுதும், உட்கார்ந்து எழுந்திருக்கும் பொழுதும், மாடிப்படி ஏறி இறங்கும்பொழுதும் , பிடிப்புடன் கூடிய வலி இருந்தது. ஆங்கில மருத்துவரிடம் சென்று **C.T. Scan** எடுத்துப் பார்த்த போது. இடுப்பில் கடைசி இரண்டு எலும்புகள் விலகி இருப்பதாக கூறினார்கள் **(L4, L5, DISC PROLAPSE)**இதற்கு சில மருந்துகளையும், இடுப்பில் போட்டு கொள்வதற்கு **Belt**-ம் எழுதிக் கொடுத்தார்கள். இருப்பினும் வலி நிற்கவில்லை. பின்பு ஆப்ரேஷன் **(Operation)** செய்தால் குணமடையும் என்று கூறினார்கள் அப்பொழுது **"MARC HERBAL CARE(P)LTD."** நிறுவனத்தின் விளம்பரத்தை செய்தித்தாள்களில் கண்டு நானும் எனது கணவரும் அங்கு சென்றோம். டாக்டரின் ஆலோசனைபடி அவர்கள் கொடுத்த மூலிகை பவுல்டிசை (Poultice) வெளிப்பிரயோகமாக தினமும் தவறாமல் தடவி வந்தேன். 9 வார தொடர்ச்சியான சிகிச்சைக்குப் பிறகு தற்பொழுது எனது வலிகள் அனைத்தும் நீங்கி பரிபூரண நிவாரணம் அடைந்தேன். நன்றி.

★ காலம் காலமாக வேதமகரிஷிகள் சித்தர்கள் கண்டுபிடித்து பரிசோதித்து அனுபவப்பட்டு வெற்றிகண்ட ஆயுர்வேத மூலிகை மருத்துவமுறைப்படி எங்களது நிறுவனம் ஒரு வெளிப்பிரயோக மூலிகை பவுல்டிசை (Poultice) கொண்டு ஆர்த்திரைட்டீஸ், ஸ்பாண்டிலைட்டீஸ், தோள்பட்டை வலி, முதுகுவலி, குதிக்கால்வலி, கைகால் மூட்டுவலி ஆகியவைகளுக்கு தகுதிவாய்ந்த அனுபவம் மிக்க ஆயுர்வேத, சித்தா மற்றும் அலோபதி மருத்துவர்களின் மேற்பார்வைகளின் கீழ் சிகிச்சை அளித்து வருகிறோம்.

★ ஒரு வரைப்போல் மற்றொருவரது உடல்வன்மை இருப்பது இல்லை என்பது யாவரும் அறிந்த உண்மை எனவே கால மாற்ற விளைவுகளால் மனிதனின் உடல்வன்மையில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஏற்ப சிகிச்சையும் பலன்களும் வேறுபடலாம் என்பதை **MARC HERBAL CARE (P) LTD** நன்கு உணர்ந்துள்ளன.

கலந்து ஆலோசிக்க இப்போதே தொடர்பு கொள்க.
தொலைபேசி
**0413-346683**

காலை 9 மணி முதல், இரவு 7 மணி வரை
வாரத்தில் 7 நாட்களும் திறந்திருக்கும்.

**MARC** ஹெர்பல் கேர் (பி) லிமிடெட்
32, செயின்ட் தெரெஸ் வீதி, பாண்டிச்சேரி – 1
(ராமன் தியேட்டர் எதிர் வீதி, ஸ்பார்க்குள் பேக்கரி எதிரில்)
**Fax : 91 - 0413 - 346683**



ஒளிமயமான எதிர்காலம் ——

—— நிலையான வருமானம்

# தமிழக அரசு நிதி நிறுவனமான

# பவர்ஃபைனான்ஸ்

# வழங்கும்

| 13.14% | 18.18% |
|---|---|
| 36 மாதங்கள் மற்றும் அதற்கு மேற்பட்ட காலத்திற்கு மாதாந்திர வட்டி 13%<br>12 மாதங்கள் & 1 நாளுக்கு 12.12%<br>25 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 12.63% | 60 மாதங்களுக்கு (மாதாந்திர கூட்டுவட்டி ஆண்டிற்கு 13%) |




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

**(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)**

84, டிடிகே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை – 600 018.

தொலைபேசி : 4997689, 4995648.

28-9-99 தேதியிட்ட 'எகனாமிக் டைம்ஸ்' இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

DIPR/1467/DIS/99

**1999 - தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம் மற்றும் சமூக ஒற்றுமை ஆண்டு.**

குருவை வணங்கி, கடலை சுண்டல் சாப்பிட்டால் பரீட்சையில் பாஸ் (கொத்துக் கடலையை முளை கட்டி சுண்டல் செய்து இளம் வயதினர் சாப்பிட்டால் புரதம், வைட்டமின் இரண்டு சத்துக்களும் கிடைக்கும். மூளைக்கு நல்லதுதானே!)

நான்கு சக்கரங்கள் உள்ள "நீதி கோஷம்" என்ற தேரில் வருவார் குரு பகவான். மஞ்சள் நிறக் குதிரைகள் பூட்டிய ரதம். ஜபமாலை, யோகதண்டம், கமண்டலம், அபய ஹஸ்தம் உடையவர் வியாழ பகவான். பிரும்மாவின் பேரனாயிற்றே!

ஆலங்குடியில் குருப்பெயர்ச்சி ரொம்ப விசேஷமாக நடந்து வருகிறது. மாசி குருவாரத்தில் சிறப்பான ஆராதனைகள் இங்கே நடைபெறுகின்றன.

இவ்வளவு தலப் பெருமைகள் வாய்ந்த ஆலங்குடிக்கு ஏன் இந்தப் பெயர் வந்தது தெரியுமா? காளமேகப் புலவர் சொல்கிறார்.

"ஆலங்குடியானை ஆலாலம் உண்டானை
ஆலங் குடியான் என்று ஆர் சொன்னார்?- ஆலம்
குடியானே யாகில் குவலயத் தோரெல்லாம்
மடியாரோ மண் மீதினில்?"

ஹலாஹலம் என்ற விஷத்தைப் பருகிய சிவபெருமானாதலால் ஆலங்குடி என்று பெயர்.

*'தீன கருணாகரனே நடராஜா! நீலகண்டனே!*
*... ... ... ... ...*
*மௌன குருவே ஹரனே எனை ஆண்ட நீலகண்டனே!'*

– நடராஜர், குரு தக்ஷிணாமூர்த்தி நீலகண்டர் என பரமேச்வரனின் மூன்று தோற்றங்களையும் அழைத்துப் பாடியிருக்கும் பாபநாசம் சிவனின் எளிய பாடல் நினைவுக்கு வருகிறது.

*மீனலோசனி மணாளா தாண்டவமாடும் சபாபதே*
*ஞானிகள் மனம் விரும்பும் நீலகண்டனே*

இந்த ஆலங்குடியாருக்கும் அவரது அம்சமே ஆன குரு தக்ஷிணாமூர்த்திக்கும் தான் இப்பாடல் எவ்வளவு பொருத்தமாய் அமைந்திருக்கிறது!

படங்கள் : **வெங்கடேஷ்**



# அமரர் கல்கி நினைவு நாள் அழைப்பிதழ்

**நிகழ்ச்சி நிரல்**

மாலை 6:00 மணி : **இறை வணக்கம்**

6:05 : **வரவேற்புரை**

6:15 : **"திரை உலகுக்கு அமரர் கல்கி ஆற்றிய தொண்டு"**
சிறப்புச் சொற்பொழிவு :
**ராண்டார் கை**

6:35 : **நன்றியுரை**

6.40 : **திருமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி** நடித்த **பக்த மீரா** – திரைப்படம்

நாள் : **டிசம்பர் 5, 1999**

இடம் : **ஆஸ்திக சமாஜம் அரங்கம்,**
**வீனஸ் காலனி,**
**ஆழ்வார்பேட்டை,**
**சென்னை - 600 018.**

**அனைவரும் வருக!**

**அறங்காவலர்கள்,**
**கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை**

● அரு. நாச்சம்மை, ஈரோடு.

? சிறந்த விளம்பரங்களுக்கு கல்கி சதாசிவம் விருது நல்ல மாற்றங்களை ஏற்படுத்தும் என நம்புகிறீர்களா?

! நிச்சயமாக. விளம்பரத் துறையில் கருத்துச் செறிவு, கற்பனைத் திறன், அழகுணர்ச்சி, புதுமைப் பொலிவு – இவற்றுடன் கண்ணியத்தையும் ஊக்குவிப்பதே நோக்கம் என்று அறிவிப்பே சொல்கிறதே! விருது பெற விரும்புகிறவர்கள் இவற்றில் கவனம் செலுத்தித் தானே ஆக வேண்டும்!



• பாரபட்சம்

• மீண்டும் வந்தார்





• நாணய...



• ...அரசியல்

● மு. ராமசாமி, வயலூர்.

? ஜெயலலிதா நேர்மையற்றவர்; ஆனால் விவேகமானவர் என டெல்லியில் கல்லூரி மாணவர்களிடையே நடத்திய கருத்துக் கணிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளதே?

! நேர்மையற்ற விவேகம், பிரேக் பிடுங்கிய மோட்டார் கார் மாதிரி.

● கலை அரசு, கோவை – 42.

? 'நாட்டுப்பற்று என்பது ஆன்மிகத்தைச் சார்ந்ததாக இருக்க வேண்டும்' என்கிறார் பண்டித தேரு. ஏராளமான மதங்கள் உலவும் நமது நாட்டில் இது எப்படி சாத்தியம்?

! பாரதியாரைப் படியுங்கள் – பாரத மாதாவுக்கும் பராசக்திக்கும் இடையே வித்தியாசமில்லை என்பதை உணர்வீர்கள். அவ்வாறே ஒவ்வொரு மதத்தினரும் நாட்டுப் பற்றை ஆன்மிகத்துள் இணைப்பதில் சிரமமேயில்லை.

● ஏ.ஜி. கல்யாணசுந்தரம், மணியக்காரன்பாளையம்.

? வங்கிகள் தனியார்மயமானால் ஏழை எளியவர்களுக்குச் சுலபமாகக் கடன் கிடைக்கும் என்று நம்புகிறீர்களா?

! திருப்பித் தர நினைக்கிற அனைவருக்கும் சுலபமாகக் கிடைக்கும். வங்கிகளின் வெற்றியே வட்டியில் தானே இருக்கிறது!

● என். பாலகிருஷ்ணன், மதுரை – 1.

? சென்னையில் தபால் பட்டுவாடா சேவை மிகவும் மோசமாக இருப்பதாக ஓர் ஆய்வில் தெரியவந்துள்ளதாமே?

! இதற்கெல்லாம் ஒரு ஆய்வு தேவையா என்ன!

● ஆர்.பி. ஜெயச்சந்திரன், திருச்சி – 9.

? ஒரிசாவை மீண்டும் புயல் தாக்கும் என ஒரு வானிலை நிபுணர் எச்சரிக்கை விடுத்துள்ளது குறித்து என்ன நினைக்கிறீர்கள்?

! மக்களை எம்.எம். ராஜேந்திரன் காப்பாற்றினால்தான் உண்டு என்று நினைக்கிறேன்!

● ஆ.ச. மாரியப்பன், புதுக்கோட்டை.

## 'போர்க்குணம் வாய்ந்த எதிர்க்கட்சி' என்றால்...?

? 'போர்க்குணம்' வாய்ந்த எதிர்க்கட்சியாகச் செயல்படுவதென்றால் என்ன பொருள்?

! எதிர்க்க வேண்டும் என்பதற்காகவே எதை வேண்டுமானாலும் கூறுவது. ஆராய்ந்து பாராமல் குற்றம்சாட்டுவது என்று அர்த்தம்!

● உஷா, சென்னை – 4. ❑

? ராஜீவ் காந்தி கொலை வழக்கில் நளினிக்குத் தூக்கு தண்டனையிலிருந்து

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
உஷா,
ஏ. 9, சாந்தி ஃப்ளாட்ஸ்,
4, ஆப்பு தெரு, மயிலாப்பூர்,
சென்னை - 600 004.

***விலக்கு அளிக்கும்படி கேட்கிறாரே சோனியா – இது மாதிரி செய்தால் குழந்தை இருக்கும் பெண்கள் (தீவிரவாதி கள்) அதிகமாகக் குற்றங்கள் செய்யத் தூண்டப்பட மாட்டார்களா?***

! நளினியும் முருகனும் விசாரணைக் கைதி களாக இருந்த காலத்தில்தான் கல்யாணம் செய்து கொண்டு குழந்தை பெற்றுக் கொண் டார்கள். தங்கள் எதிர்காலம் கேள்விக்குறி என்று அறிந்தே அவர்கள் எடுத்த முடிவு அது. எனவே இப்போது பெருக்கெடுக்கும் திடீர் அனுதாப வெள்ளம், அரசியல் மடைதிறந்ததால் ஏற்பட்டதே யன்றி வேறில்லை. இந்த அனு தாபத்தைப் பிற குற்றவாளிகள் எதிர்பார்க்க முடியாது அல்லவா! ஏன் இந்த பாரபட்சம்?

● **ஸ்ரீவித்யா காளிதாஸ்,**
**சிதம்பரம் – 2.**

***? மேற்கு வங்க முதல்வராக நீடிக்க ஜோதிபாசு ஒப்புக் கொண்டுள்ளாரே?***

! நான் அப்பவே சொன்னேனே!

● **எஸ். சுவாமிநாதன்,**
**மன்னார்குடி.**

***? குறைந்தபட்சம் பத்தாயிரம் ரூபாய் பண முடிப்பு இல்லாமல் எந்தக் கலைஞரும் எந்த விருதையும் ஏற்றுக் கொள்ளக்கூடாது என்கிற காரைக்குடி மணியின் கருத்து பற்றி...?***

! புதிய கருத்தல்ல. தொகை குறிப் பிடாமல் செம்மங்குடி அவர்கள் இதை முன்பே சொன்னதுண்டு. அது சரி, சிலர் விருதுக்குப் பண முடிப்புத் தரத் தயாராயிருந்தால் என்ன செய்வதாம்!

● **க. நா. இராஜேஸ்வரன்,**
**மொரட்டுப்பாளையம்.**

***? கடும் நிதி நெருக்கடியில் மத்திய, மாநில அரசுகள் இருப்பதாக மத்திய திட்டக் குழு கூறியிருப்பது பற்றி...?***

! இதற்கிடையில், அடுத்த ஆண்டு 6.5 சதவிகிதம் பொருளாதார வளர்ச்சி இருக்கும் என நிதியமைச்சர் சொல்வதுதான் மில்லெனிய ஜோக்! பாஸிடிவ் அணுகுமுறை அவசியம்தான். அதற்காக நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளக் கூடாது. அரசாங்கத்தின் உற்பத்திக்கு உதவாத டம்பாச்சாரி செலவினங்கள் குறைந்தாலன்றி விமோசனமே இல்லை!

● **க. இராஜசேகரன்,மயிலாடுதுறை.**

***? எட்டே எட்டு மந்திரி களுடன் காமராஜர் தமிழ கத்தை ஆண்டார். இன்று உ.பி.யில் தொண்ணூற்றி யொரு அமைச்சர்கள். இது எதைக் காட்டு கிறது?***


• பண முடிப்பு விஷயம்!


• கசப்பு மருந்து!


• கதி வேறில்லை

! உ.பி.யில் பா.ஜ.க.வின் உட்பூசல்களும் கூட் டணிக் குழப்பங்களும் இன் னும் உச்சத்தில் இருப்பதைத் தான். காமராஜ் காலத்தில் தலைவர்களுக்குத் தார்மிக பலம் இருந்தது. நாட்டு நலன் கருதும் உயர் நோக்கு இருந்தது. இன்று, பதவியைக் காப்பாற்றிக் கொள்ளும் பரிதவிப்பு, ஆட்சி யைத் தக்க வைத்துக் கொள்ளும் அவஸ்தை மட்டும் தான் இருக்கின்றன.

● **வி. என். பிரபு, சென்னை – 91.**

***? இப்போது இருக்கும் அரசியலில் தூணையமாக யார் இருக்கிறார்கள்?***

! புதிய ராஜ்யசபா எம்.பிக்க ளான சோ, லதா மங்கேஷ்கர், நரிமன், நானாஜி தேஷ்முக்!

● **நகை இ. மகாராசன்,**
**கடமலைக்குண்டு.**

***? துப்பாக்கி முனையில் பூலான் தேவியிடம் 35,000 ரூபாயைக் கொள்ளையடித்துச் சென்று விட்டனராமே?***

! Bitter taste of her own medicine!


• தார்மிக பலம்


• 'பிரேக்' இல்லாத....

# நடக்குமென்பார்,



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

பெரிய பொறுப்புகளாலும் நிறைய இடையூறுகளாலும் அவஸ்தைப்படற உங்களுக்குக் கஷ்டம் நீங்கற காலம் கிட்ட வந்தாச்சு. உங்களுக்கு இருந்து வந்த எதிர்ப்புகள் மறைந்து வெற்றிப் பாதைல ஜோரா நடைபோடப் போறீங்க. குறிப்பா, தொழில்துறைல இருக்கறவங்களுக்கு எதிர்பாராத இடங்கள்லேயிருந்து கிடைக்கப் போற உதவி, உங்க எதிர்காலத்தைப் பிரகாசமாக்கப் போவுது. அலுவலக ஊழியர்கள், பெண்கள், சமயச் சொற்பொழிவாளர்களுக்கு ஊதியம் கூடும். வீட்டுல நல்ல காரியங்கள் நடக்கப் போவுது. ஆனா, குடும்பத்துல சிறு மனஸ்தாபங்களைத் தவிர்க்க முடியாது.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

ஆயிரம் பிரச்னைகளுக்கு நடுவலயும் உங்க தொழில்ரீதியிலான செயல்திறனுக்கு எப்பவும் குறைவு வராது. மேல்மட்ட சலனங்கள் ஒருபோதும் உங்க மனசை பாதிக்காது. வீட்டுலயும் ஆபீஸ்லேயும் தாங்க முடியாத பிரச்னைகள் உங்களை அலைக்கழிக்கும். யாருமே உங்களைப் புரிஞ்சுக்காம, அவமதிப்பாங்க. ஆனா, நீங்க நினைச்சதை சாதிக்கற உறுதியும் வலுவும் உங்ககிட்டே இருக்கும். இந்த வாரம் வெளியூர்ப் பயணங்கள் வேணாம். ராத்திரி கண் விழிக்கறதும் நல்லதில்லை. பணப் பிரச்னை இல்லாத நேரம்னாலும் யாருக்கும் கடன் குடுக்கறது மட்டும் கண்டிப்பா வேணாம்.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

சூரியனும் குருவும் உங்களை வலுவா சப்போர்ட் பண்றதால, செய்யற தொழில்ல வளர்ச்சி உறுதி. அரசு விவகாரங்கள்ல அனுகூலமான திருப்பங்களை எதிர்பார்க்கலாம். சிலருக்குப் புதிய வேலை வாய்ப்புகள், திருமணம் கைகூடும். பெண்களுக்கு ஒரு உல்லாசப் பயணம் வாய்க்கும். வீட்டுல மகிழ்ச்சிக்குக் குறைவிருக்காது. பொருளாதாரப் பிரச்னைகள் இல்லைன்றதே பெரிய ரிலீஃப்தானே? விவசாயிகள், விஞ்ஞானிகள், காவல் துறையினருக்குப் பொருள் சேரும் வாரம். கல்வித் துறையினருக்கு மட்டும் கொஞ்சம் பணிச்சுமை அதிகமா இருக்கும்.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

மதிப்பும் அந்தஸ்தும் உயரும். வியாபாரிகளுக்கு நல்ல லாபம் கூடும். நீண்ட நாள் கடன் தொல்லைகள் நீங்கற அளவுக்குக் கையில பணப்புழக்கம் இருக்கும். கலைத்துறையினருக்கு நல்ல பலன்கள் உறுதி. புதிய ஒப்பந்தங்கள், விருதுகள்னு ஜமாய்ப்பாங்க. சமூகப் பணிகள்ல ஆர்வம் உள்ளவங்களுக்கு இப்ப கொஞ்சம் அலைச்சலான நேரம். துணிச்சலான காரியங்களுக்கு மனசு தயாரானாலும் உடம்பு ஒத்துழைக்கணுமே? கொஞ்சம் மருத்துவச் செலவுகள் இருக்கும், பார்த்துக்கங்க.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

திறமை வெளிப்படற வாரம். எதிரிகள் பலனலாயிடுவாங்க. தொழில் சார்ந்த உங்க எல்லா முயற்சிகளும் வெற்றியடையும். நண்பர்கள் உதவுவாங்க. சில விஐபிங்களோட தொடர்பும் பேருதவியா இருக்கும். வழக்குகள் சாதகமா தீர்ப்பாகும். பழைய கடன் பாக்கிகள் வந்து சேரும். பெண்களுக்குத் திருமணம் கைகூடும். காதல் வயப்பட்டவர்களுக்கு இனிமையான அனுபவங்கள் கிடைக்கும். பிரமோஷனோட கூடிய டிரான்ஸ்பரை அரசு ஊழியர்கள் எதிர்பார்க்கலாம். வீட்டுல நடக்கப் போற விசேஷத்தை ஒட்டி கொஞ்சம் நிறைய செலவுகள் செய்ய வேண்டி வரும்.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

தேவையில்லாத விஷயங்களில் தலையிட்டுப் பேரைக் கெடுத்துக்கற வாரம் இது. கவனமா இருக்கணும். ஆபீஸ்ல யாரையும் மட்டம் தட்டிப் பேசாதீங்க. வேலைல கவனமா இருக்கணும். சிலர் மெமோ வாங்கற வாய்ப்பு இருக்கு. நண்பர்களை நம்பி எந்த முக்கியப் பொறுப்புகளையும் விடாதீங்க. கவுத்துடுவாங்க. கடன் வாங்காதீங்க. வீடு, மனை வாங்கவும் இது சரியான சமயம் இல்லை. மீடியாவுல இருக்கறவங்களுக்கு மேலதிகாரிகளால சில தொல்லைகள் இருக்கும். சிலருக்கு இடமாற்றல் நிகழவும் வாய்ப்பு இருக்கு.



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

# நடக்கும்

## அக்னிசர்மா பக்கம்

### டிசம்பர் 1 முதல் 7 வரை

பிரச்னை இல்லாத வாரந்தான். ஆனாலும் பேச்சில் நிதானம் தேவை. 'பேச்சுல மட்டுமில்லை. செயல்லயும்! குறிப்பா, பெண்கள் சமையல், வீட்டுத் துப்புரவு மாதிரியான காரியங்கள்ல ஈடுபடும் போது சிறு விபத்துகளுக்கு வாய்ப்பு இருக்கு. கரெண்ட் விஷயத்துல கவனமா இருங்க. இந்த வாரம் உங்க நெடுநாள் கனா ஒண்ணு நனவாகப் போகுது. வீட்டுக்கு ஒரு பழைய நண்பர் திடீர்னு வந்து மகிழ்ச்சியில் ஆழ்த்துவார். ஆன்மிகத்துல ஆர்வம் பெருகும்.



**விருச்சிகம்** : (விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)

எதிலும் வெற்றிங்கற கொள்கை உள்ள உங்களுக்கு இது கொஞ்சம் சிரமமான நேரம். உங்க முயற்சிகள் அளவோடதான் பலன் தரும். அதுக்காக மனச்சோர்வு அடையாம இன்னும் தீவிரமா உழைக்கணும். குடும்ப நலன்லேயும் அக்கறை செலுத்துங்க. குறிப்பா மனைவி உடல்நலத்துல. வீட்டுல அடிக்கடி வரும் சிறு குழப்பங்களால நீங்க சோர்ந்துடாம, அதைத் தீர்த்து வைக்கப் பாருங்க. இந்த வாரம் சிலர் வெளியூர்ப் பயணங்களைத் தவிர்க்க முடியாது. வீடு வாங்கற யோசனை இருந்தா ஒரு பத்து நாளைக்குத் தள்ளிப் போடுங்க. பஸ் பயணத்தில் எச்சரிக்கையா இருங்க.



**தனுசு** : (மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)

எடுத்த காரியம் வெற்றியாகும். வீட்டுல நல்ல சப்போர்ட் கிடைக்கும். அலுவலக மேலதிகாரிகள், நண்பர்கள்னு எல்லா வகையிலயும் எதிர்பார்த்த உதவிகள் கிடைக்கும். பணப் பிரச்னை இருக்காது. வீடு, மனை வாங்குவீங்க. சிலர் உல்லாசப் பயணம் போய் வருவாங்க. கலைஞர்களும் எழுத்தாளர்களும் புகழ் கூடப் பெறுவாங்க. அரசு விவகாரங்கள் சாதகமா முடியும். வழக்குகளுந்தான்! பயணத்துல மட்டும் எச்சரிக்கையா இருக்க வேண்டியது அவசியம்.



**மகரம்** : (உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)

கொஞ்ச நாளா இருந்து வந்த சில்லறைப் பிரச்னைகள் தீர்ந்து, நிலைமை சுமுகமாகும். பணக் கையிருப்பு திருப்தி தரும். கணவன் மனைவி உறவு சீரா இருக்கும். சிலருக்குக் குழந்தைப் பேறு கிடைக்கும். கோயில்களுக்குப் போறதுல ஆர்வம் கூடும். பெண்களுக்குப் புடைவை, நகைகள்னு வாங்கற யோகம் இருக்கும். விளையாட்டுத் துறையினரும் விஞ்ஞானிகளும் புகழ் ஓங்கி இருப்பாங்க.



**கும்பம்** : (அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)

திறமை கூடி, பல காரியங்களைச் சாதிப்பீங்க. நீண்ட நாள் வழக்குகள் இப்ப சுமுகமா தீர்ப்பாகும். திட்டங்களைச் செயல்படுத்த குடும்பத்தார் ஒத்துழைப்பு பரிபூரணமா கிடைக்கும். விவசாயிகள், அரசுப் பணியாளர்கள், விளையாட்டுத் துறையினருக்கு இது பிரமாதமான வாரம். நல்ல புகழும் பணமும் புரளும். பெண்களுக்கு உடல்நலன் குறித்த கவனம் முக்கியம். இரும்பு சம்பந்தமான வியாபாரம் செய்யறவங்களுக்கு லாபம் கூடும். ஆசிரியர் - மாணவர் உறவு, கணவன் மனைவி உறவுல கொஞ்சம் உரசல் ஏற்பட்டுச் சரியாகும்.



**மீனம்** : (பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

தன்னம்பிக்கை ஓங்கியிருக்கும். உங்க துணிச்சலான திட்டங்களைச் செயல்படுத்த இதுவே சரியான நேரம். நண்பர்கள் உதவுவாங்க. வங்கிக் கடன் மாதிரி எதையாவது எதிர்பார்த்திருந்தீங்கன்னா அது சுலபமா கிடைக்கும். வெளியூர்ப் பயணங்கள் ஆதாயம் தரும். பெண்களால அனுகூலம் உண்டு. ஆனா, எதிர்பாராத சில சிக்கல்களையும் சந்திக்க வேண்டி வரும். குறிப்பா, அரசு ஊழியர்களுக்கு இந்த வாரம் சில சங்கடங்கள் இருக்கும். ●



மீனராசிக்காரரான சுஜிதாவுக்கு தன்னம்பிக்கை ஓங்கியிருக்கிற வாரமாம்!

**அமரர் கல்கி நூற்றாண்டு, இசை மேதை முசிரி சுப்பிரமணிய அய்யருக்கும் நூற்றாண்டாகும். 'கல்கி' அவரிடம் கொண்டிருந்த மதிப்பு, முசிரி நடித்து பெரும் புகழ் பெற்ற "பக்த துகாராம்" படத்துக்குக் 'கல்கி' எழுதிய விமர்சனத்தில் இன்றும் பிரதிபலிக்கிறது. தாம் ஒரு சங்கீதக் கலைஞர் மட்டுமின்றி சிறந்த நகைச்சுவை எழுத்தாளரும் கூட என்பதை முசிரி அவ்வப்போது நிரூபித்து வந்தார். இங்கு பிரசுரமாகும் கட்டுரை அதற்கு ஓர் எடுத்துக்காட்டு. இக்கட்டுரை 1930களின் இறுதியில் ஒரு விகடன் தீபாவளி மலரில் இடம் பெற்றது. அந்த மலரின் சமர்ப்பணம் பக்கத்தில் இக்கட்டுரை பற்றி குறிப்பிடும் கல்கி, "கட்டுரையை நிராகரித்து விடப் போதிய காரணமிருந்தும், 'பெரியோர் செய்த பெரும் பிழையைச் சிறியோர் பொறுத்தல் கடன்' என்பதை முன்னிட்டு இதுவும் பிரசுரிக்கப்படுகிறது!" என்று குறிப்பிட்டு வாசகரின் ஆவலைத் தூண்டுகிறார். கல்கி அவர்களின் நினைவு நாளான டிசம்பர் 5ம் தேதியையொட்டி இது மறு பிரசுரமாவதில் ஒரு முக்கியத்துவம் உள்ளது என்பதையும் சொல்லி வாசகரின் ஆவலை இரட்டிப்பாக்குகிறோம்!**

# மதிப்புரை

நான் போன வருஷம் தீபாவளி மலரில் "எனது கடற் பிரயாணம்" என்று ஒரு வியாஸம் எழுதினேன். இதை நேயர்களுக்குத் தெரியப்படுத்த வேண்டியது மிகவும் அவசியமாகத் தோன்றுகிறது. நானே ஒரு வியாஸம் எழுதி விட்டேன் என்று நினைக்கும் போதெல்லாம் எனக்கு ஆச்சர்யமும் ஸந்தோஷமும் உண்டானதைப் பற்றி நீங்கள் முகத்தைச் சுளிப்பது நியாயமல்ல, ஸார்! காக்காய்க்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு.

'என்னுடையது' என்று எந்த வஸ்துவைப் பற்றி நினைத்தாலும் யாருக்குமே ஒரு விதமான திருப்தியும் ஸந்தோஷமும் உண்டாவது ஸஹஜம். நீங்கள் என்னை வெருட்டிப் பார்க்க வேண்டாம், ஸார். உங்களுக்குக் கூட அப்படித்தான் இருக்கும்.

சென்ற வருஷம் தீபாவளி மலர் வெளி வருவதற்குக் கிட்டத் தட்ட ஒரு வருஷத்துக்கு- இல்லை, டயரியைப் பார்த்துச் சொல்கிறேன்- சுமார் 20 நாட்களுக்கு முன்பே என் வியாஸத்தை விகடன் ஆலயத்திற்கு அனுப்பி விட்டேன். அவ்வளவு தான்; அனுப்பின தேதியிலிருந்து, பிரசுரமாகும் வரைக்கும் ஒரு நாள் ஒரு யுகமாக இருந்தது. பிரசுரம் ஆன பிறகு எப்படியிருந்தது என்று கேட்கிறீர்களா? என்ன, ஸார், அவ்வளவு அவசரம்? அதுதான் எழுதிக் கொண்டு வருகிறேனே. முழுக்கப் படியுங்களேன்.

பிரசுரம் ஆன தேதியிலிருந்து "நேயர்கள் எல்லாரும் என்னுடைய வியாஸத்தைத்தான் படிப்பார்கள்.



• மிஸ்டர் சேஷன்

அதைப் பற்றித்தான் பேசுவார்கள்" என்று எண்ணினேன். மலர் வெளியான தேதியிலிருந்து தபால்காரனிடமும், தந்திச் சேவகனிடமும் கடிதங்களையும் தந்திகளையும் உடனே கொண்டு வந்து கொடுக்கும்படி சொல்லி வைத்திருந்தேன். விபரீதமாக, நான் எதிர்பார்த்ததற்கு விரோதமாய், தபால்காரன் பக்கத்து வீடுகளுக்குத் தவறாமல் வந்து விட்டுப் போவான். ஆனால் எனக்கு ஒரு கடிதமாவது கொண்டு வருவதில்லை.

ஒருவராவது என்னை "ஏன் என்று" கேட்டவர்களில்லை. யாரோ ஒரு பெரியவர் "ஏ மலையே! இங்கே வா" என்று கூப்பிட்டு அந்தக் குறும்பு பிடித்த மலை வராமற் போகவும் "நீ வர மாட்டாயா! சரி, நானே உன்னிடம் வருகிறேன்" என்று சொன்னாராமே, அது போல நானும் ஊர் ஊராய்ப் போய் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொண்டு விடுவது என்று தீர்மானித்து விட்டேன்.

ஒரு நண்பர், வழக்கமாய் விகடன் தவறாமல் வாசிக்கப்பட்டவர் என்று தெரியும். அவரைக் கேட்க ஆரம்பித்தேன். உடனே முகத்தில் அசடு வழிய ஆரம்பித்தது. இது பார்ப்பவர்களுக்குத்தான் ரொம்ப நன்றாய்த் தெரியும்.

**நான்:** ஏன் ஸார், விகடன் தீபாவளி மலர் வாசிச்சேளோ?

**அவர்:** வழக்கம்போலே எட்டணாத்தானிருக்கும்னு பையனைக் கடைக்கு அனுப்பினேன். போய்ட்டு வந்து பன்னண்டணான்னு சொன்னான். சரிதான்னு 12 அணாவைக் கொடுத்து 'வாங்கிண்டு வா'ன்னு சொன்னேன். பய போறத்துக்குள்ளே 'ஸ்டாக்' ஆயிடுத்தாம். பக்கத்தாத்திலே வாங்கியிருக்கா. அவாத்திலேயிருந்துதான் வாங்கி வாசிக்கணும். இப்போ கொடுப்பாளா அவா?

(மேற்சொன்ன 'பக்கத்து வீட்டுக்காரர்' எதிர்பாராதபடி அங்கு வந்து சேர்ந்தார்.)

**நான்:** குட்மார்னிங்! ஏன் ஸார், தீபாவளி மலர் நீங்கள் வச்சண்டிருக்கேளாமே. இவர் பார்க்கணும்னு சொல்றார், கொடுக்கப்படாதோ?

**ப.வீ:** நானே நேத்திக்கித்தானே வாசிக்க முடிச்சேன்? வீட்டிலே எல்லாரும் ஒவ்வொருத்தரா வாசிக்க எடுத்துண்டுடா.

**நான்:** ஆனால் நீங்கள் முழுக்க விடாமே வாசிச்சுட்டேளோ?

**ப.வீ:** எல்லாத்தையும்தான் நான் வாசிக்கிறது!

**நான்:** எதெது அதுலே ரொம்ப நன்னாயிருக்கு, சொல்லுங்கோ ஸார்.

**ப.வீ:** அதை எப்படி ஸார் சொல்றது? இந்த வருஷம் எல்லா அம்சமுமே முன் வருஷங்களை விட ரொம்ப நன்னாயிருக்கு; அவ்வளவுதான் சொல்லலாம், ஸார்.

மற்றோர் ஊரில் கோபாலய்யர் என்பவரைச் சந்திக்க நேர்ந்தது. அவர் விகடனும் கையுமாயிருந்தார்.

**நான்:** அய்யர்வாள், தீபாவளி மலர் வாசித்தேளோ? எப்படியிருக்கு?

**கோ:** வாசித்தேனே; ரொம்ப நன்னாயிருக்கு ஸார்.

**நான்:** எல்லா கட்டுரைகளையும் வாசித்தேளோன்னு கேட்டேன்.

**கோ:** முக்யமா வாசிக்க வேண்டியதெல்லாம் வாசித்தாயிடுத்து. ஏதோ ஒண்ணு ரெண்டு பாக்கியிருக்கும். ஏன்?

**நான்:** நானும் ஒரு வியாஸம் எழுதியிருக்கேன். அது எப்படி இருக்குன்னு உங்களைக் கேட்கலாம்னு கேட்டேன்.

**கோ:** நீங்க எழுதியிருக்கேளா? எது அது?

**நான்:** 'எனது கடற் பிரயாணம்'னு எழுதியிருக்கேன்.

**கோ:** நீங்களா எழுதியிருக்கேள்? ஆமாம் ஆமாம், உங்க பேர் போட்டிருந்ததே- (விரலை ஒரு தடவை உதறி விட்டு) அதை வாசிக்கணும்னு எடுத்து வச்சேன் ஸார், அதுக்குள்ளே ஏதோ காரியமாப்



• முசிரி

போனேன். அப்புறம் மறந்து போயிட்டேன்.

எல்லோரையும் அபிப்பிராயம் கேட்டுக் கேட்டு என் மனது ஒடிந்து போய்விட்டது என்பது நான் சொல்லாமலே உங்களுக்குத் தெரிய வரும். உங்களுக்கே இந்த வியாஸத்தை வாசித்து மனது ஒடிந்திருக்குமென்பதில் சந்தேகமில்லை.

என்ன இருந்தாலும் சுய அபிமானம் லேசிலே போகுமா? இத்தாலி தேசத்திலிருக்கும் மிகவும் அழகான "நேப்பிள்ஸ் நகரைப் பார்த்து விட்டுச் செத்துப் போ" என்ற ஆங்கிலப் பழமொழி ஞாபகம் வந்தது. யாராவது என் வியாஸத்தை வாசித்து நன்றாயிருக்கிறது என்று சொல்லி அதை என் காதாரக் கேட்டு விட்டுத்தான் சாக வேண்டும் என்ற பைத்தியம்- இல்லை எண்ணம்- என்னைப் பிடித்துக் கொண்டது.

சென்னை ஜார்ஜ் டவுனில் 'ஸூர்ய பவன்' காபி ஹோட்டலில் காபி சாப்பிடுவதற்காகப் போனேன். ஒரு மேஜைக்குப் பக்கத்தில் இரண்டு பேர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுள் ஒருவர் எனக்கு ரொம்பவும் தெரிந்த மிஸ்டர் ராமய்யா. அவர் என்னைத் தன் மேஜைக்கு வரும்படி கூப்பிட்டார். அவர் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு பெரிய மனிதரிடம் என்னை அறிமுகம் செய்வித்தார்:- "இவர்தான் விகடன் மலரில் அருமையாக வியாஸம் எழுதியிருக்காரே தெரியுமோல்லியோ?" என்று.

புதியவர் (ரொம்ப மரியாதையுடன்):- அப்படியா, ரொம்ப சந்தோஷம் ஸார். நான் தங்களைப் பார்க்க வேணுமென்று ரொம்ப ஆவலாயிருந்தேன். ஏதோ தற்செயலாய்த் தங்களைப் பார்க்க நேர்ந்தது என்னுடைய அதிர்ஷ்டம். தாங்கள் விகடனில் எழுதினதை நான் பலமுறை வாசிப்பது வழக்கம். எவ்வளவு முறை வாசித்தாலும் அலுக்காது. என் வீட்டில் எல்லோரும் குறைந்தது நூறு தடவை வாசிப்பார்கள்.

நான் (வெகு அடக்கமாய்):- அப்படியா? ரொம்ப சந்தோஷம்.

இதற்குள் மிஸ்டர் ராமய்யா அவசரமாக எலுமிச்சம் பழம் வாங்கப் போக வேணுமென்று சொல்லிவிட்டு எழுந்து போய்விட்டார். நாங்களும் காபி சாப்பிட்டாய் விட்டது. 'பில்' கொண்டு வந்து கொடுத்தான். (சாப்பாட்டு) ராமய்யாவுக்கும் சேர்த்துத்தான். 'பில்'லில் ரூ. அ. பை. என்ற மூன்றிடங்களில் முதலிடத்திலேதான் லக்கம் ஜாஸ்தியாக இருந்தது. இருந்தாலும் பரவாயில்லை. என் வியாஸத்தை இவ்வளவு ஆவலுடனும் அன்புடனும் வாசித்தவருக்கு நான் காபி ஹோட்டல் 'பில்'லாவது கொடுத்து என் நன்றியை அவருக்குச் செலுத்தலாமென்று எண்ணிப் பையிலிருந்து பணம் எடுத்தேன். உடனே மிஸ்டர் சேஷன் கோபங்கொண்டவராய், "நன்றாயிருக்கு ஸார், நீங்கள் பண்ணுகிற காரியம். 'கல்கி' யோடே காப்பி சாப்பிட்டுவிட்டு அவரைப் பணம் கொடுக்கச் சொன்னேன் என்ற கௌரவம் வேறு எனக்கு வர வேணுமா?....."

பிறகு அவர் என்ன சொன்னார் என்பது எனக்குக் காதில் படவில்லை. யாரோ தெருவில் என்னை மிக அவசரமாய்க் கூப்பிட்டதாகக் காதில் பட்டது. வாசற்பக்கம் வந்ததுதான் தெரியும். பிறகு திருவல்லிக் கேணி கடற்கரைக்கு எப்படி எதற்காக வந்தேன் என்று இன்னமும்தான் யோசனை செய்து கொண்டிருக்கிறேன்!

ஓவியங்கள்: **மாலி**

---



**"பக்கத்து வீட்டு ஸ்கூல் வாத்தியார்கிட்ட தினமும் ஓசி பேப்பர் வாங்கி படிப்பீங்களே; இப்பல்லாம் ஏன் போறதில்லே?"**

**"பேப்பர் படிச்சப்புறம், படிச்ச செய்திகளை மூன்றில் ஒரு பங்காகச் சுருக்கி ஒரு வெள்ளைப் பேப்பரில் எழுதித் தரச் சொல்றாரு!"**

**— என்.கே. கண்ணன்**

சூப்பர் ஸ்டார் யார் என்று கேட்டால், சின்னக் குழந்தைகள் ரஜினியைச் சொல்லும். மற்றவர்கள், அவரவருக்குப் பிடித்த நட்சத்திரங்களைச் சொல்வார்கள். கோவை மக்கள் கொஞ்சம் வேறு ரகம். அவர்களிடம் சூப்பர் ஸ்டார் யாரென்று கேட்டால் ராதாகிருஷ்ணன் என்கிறார்கள். கோவை கலவர பூமியாகி, நாளொரு குண்டு வெடிப்பு, பொழுதொரு கொலை என்றாகி விட்ட பிறகு அங்கே அமைதியை மீட்டுக் கொண்டு வர அரசு அனுப்பிய போலீஸ் கமிஷனர், ராதாகிருஷ்ணன்.



• புதிதாக உருவாகும் கமிஷனர் அலுவலகம்

நாற்பத்திரண்டு வயதான இந்த ஸ்ரீவில்லிபுத்தூர்க்காரர் கோவையில் தான் தமது ட்ரெயினிங்கை முடித்து விட்டு 85 - 86ல் திண்டுக்கல் ஏ.எஸ்.பி. யாகப் பொறுப்பேற்றார். பிறகு ராமநாதபுரத்திலும் வேறு ஆறு மாவட்டங்களிலும் சூப்பரின்டென்டாகப் பணியாற்றி விட்டு டி.ஐ.ஜி. புரமோஷனில் மறுபடி திண்டுக்கல்லுக்குச் சென்றிருக்கிறார். அந்தச் சமயத்தில் கோவையில் குண்டுகள் வெடிக்க, அங்கே தூக்கிப் போட்டுவிட்டார்கள், கமிஷனராக.



• ராதா கிருஷ்ணன்

# மக்கள் உதவினர்: மலர்ந்தது அமைதி!

"டிபார்ட்மென்டில் எந்த உயரதிகாரியும் ஏதாவதொரு சந்தர்ப்பத்தில் டெபுடேஷனில் வேறு துறைக்கு' - வேறு பொறுப்புக்குப் போய் வருவார்கள். இவர் ஒருவர் தான் ஐபிஎஸ் முடித்த தினத்திலிருந்து இன்றுவரை மாநிலக் காவல் துறையிலேயே இருக்கிறார். தவிர கலவரங்கள் அடிக்கடி நடக்கும் பகுதிகளில் எஸ்.பியாக இருந்து, திறமையாகச் சமாளித்தவர். அதனால்தான் எத்தனையோ சீனியர் ஆபீசர்கள் இருக்க - கோவைக்கு இவரை

**— கோவை போலீஸ் கமிஷனர் ராதாகிருஷ்ணன்**



**மகான்கள் சொன்னதை மறந்துடாதீங்க!**

*தனது நிழலைத் தானே பிடிக்க முடியாது. அந்த நிழல் போன்றது அகங்காரம். அதை அகற்ற யாருக்கும் இயலாது. சூரியன் தலைக்கு மேலே வந்து விட்டால் நிழல் பாதத்துக்குக் கீழே மறைந்து போய் விடுகிறது. ஞானம் வருகிறபோது அகங்காரம் அகன்று போகிறது! சொன்னவர் : ராமகிருஷ்ண பரமஹம்சர் தகவல்: ஆர். பார்த்திபன்*

கமிஷனராக நியமித்திருக்கிறார்கள்'' என்கிறார்கள் கோவை போலீசார்.

''ஆனால், இங்கு ஏற்பட்டது மதக்கலவரமே அல்ல. ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இங்கு எந்தப் பிரச்னையும் தகராறும் இல்லை. இருதரப்பிலுமுள்ள சில தீவிரவாதிகளுக்குள் ஏற்பட்ட மோதல்தான். அதற்கு மதப்பிரச்னை காரணமல்ல'' என்கிறார் ராதாகிருஷ்ணன்.

''நான் இங்கு பொறுப்பேற்றதும் செய்த முதல் காரியம், இந்த மக்களின் மனோபாவத்தைப் புரிந்து கொள்ள முயன்றது தான். சப்தம் போட்டுக் கூடப் பேசத் தெரியாத மக்கள் இவர்கள். நேரத்தை வீணாக்காமல் தொழிலில் அக்கறையாக இருப்பவர்கள். பொருளாதார வளர்ச்சி என்பது இவர்களது முக்கிய நோக்கம். கல்வி, வேலை வாய்ப்பு, தொழில் தொடங்க – என எல்லா வகையிலும் தன்னிறைவு கொண்ட நகரம். மதத்தை முன்னிறுத்தி பிரச்னைகளை உருவாக்கவெல்லாம் இவர்களுக்கு விருப்பமோ, நேரமோ கிடையாது என்பதைக் கண்டு கொண்டேன். வியாபாரக் காரணங்களுக்காக, இருவேறு தரப்பினர் மோதிக் கொண்டதற்கு மதச்சாயம் பூசி விட்டார்கள். அதனால்தான் அத்தனை பெரிய பிரச்னையாகி விட்டது.''

''நகரில் அமைதி மீண்டது என்று ஒரு வரியில் செய்தி வந்து விட்டது. அத்தனை பெரிய கலவரத்துக்குப் பின் அமைதியை மீட்க நீங்கள் கையாண்ட முறையை விளக்க முடியுமா?''

''இது இரு மதங்கள் சம்பந்தப்பட்ட பிரச்னை அல்ல என்பது புரிந்தவுடனேயே பாதிக் கவலை தீர்ந்து விட்டது எனக்கு. கலவரத்துக்குக் காரணமான அந்தத் தனி நபர்களை முதலில் அடையாளம் கண்டு கைது செய்ய ஆரம்பித்தேன். குண்டு வெடிப்பு விசாரணைக்கென்றே' அனுப்பப்பட்ட சிறப்புப் புலனாய்வுப் படைக்கும் பலரைக் கைது செய்து தந்தோம். நம்ப மாட்டீர்கள். இந்தக் கைது நடவடிக்கைக்காகவே என் தலைமையில் நூறு அதிகாரிகள் இருபத்தி நாலு மணி நேரமும் அலைந்து கொண்டிருந்தார்கள்.

''ஒருபுறம் கைது நடந்து கொண்டிருக்க, மறுபுறம் தீவிர தேடுதல் வேட்டையும் நடந்தது. எத்தனை பைப் குண்டுகள், துப்பாக்கிகள், அரிவாள்கள்! ஒரு விஷயத்தில் மிக எச்சரிக்கையாக இருந்தேன். மெஜாரிட்டி முஸ்லீம் மக்கள் வாழும் பகுதிக்கு ரெய்ட் போனால், அப்பகுதியிலுள்ள ஜமா–அத் பெரியவர்களின் முன்னிலையில் மக்களையேதான் பெட்டி, பீரோக்களைத் திறந்து காட்டச் சொன்னோமே தவிர, ஒரு போலீஸ்காரரும் கை வைக்கவில்லை. தவிர, விசாரணை, ரெய்டு என்று பரபரப்பாக இயங்கினாலும் பெண்களின் மேல் விரல் நகம் கூடப் படக்கூடாது. இரண்டடி தள்ளியே நின்று பேசுங்கள் என்று என் படையினருக்கு உத்தரவிட்டிருந்தேன்.

''இது மக்கள் மத்தியில் காவல் துறைக்குப் பெரிய மதிப்பை உண்டாக்கி விட்டது. அவர்களே முன்வந்து எங்களுக்கு உதவியது தான் ஹைலைட்! வார்டுவாரியாக எல்லா மக்களையும் வரவழைத்துப் பேசி, அடிக்கடி நிலைமையை விளக்குவேன். இங்கே மொத்தம் 72 வார்டுகள் என்றால் 72 'அமைதி கமிட்டி'களை மக்களைக் கொண்டே அமைத்தேன். பிரச்னைக்குரிய கோட்டைமேடு, அல் அமீன் காலனி, மஜீத் காலனி, செல்வபுரம் போன்ற இடங்களுக்கு நானே சென்று மீட்டிங் போட்டு மக்களிடம் பேசினேன். மக்கள் பாதுகாப்பில் அக்கறை, அதே சமயம் கலவர வாதிகளின்மேல் ஈவிரக்கமற்ற நடவடிக்கை என்கிற எங்கள் நோக்கத்தை மக்கள் புரிந்து கொண்டு விட்டதால், ஒத்துழைப்பு சுலபமாகக் கிடைத்தது. இன்று கோவை மீண்டும் அமைதி நகரமாகி விட்டதென்றால் அதற்கு நானல்ல; மக்களின் ஒத்துழைப்பே காரணம்!''

''அவசர கால நடவடிக்கை சரி. இப்

போது எப்படி இயங்குகிறீர்கள்?"

"அதே போலத்தான்! பிரச்னை உருவாக லாம் என்று கருதப்படும் முப்பது இடங் களில் வழக்கமான காவல் நிலையங்கள் தவிர முப்பது சிறு பில்டிங்குகள் கட்டியிருக் கிறோம். ஒவ்வொரு இடத்திலும் 24 மணி நேரமும் எட்டு போலீசார் இருப்பார்கள், வாக்கிடாக்கியுடன். சினிமா தியேட்டர்கள் மாதிரி கூட்டம் சேரும் இடங்களுக்கு எப் போதும் ஒரு போலீஸ் ஜீப் பாதுகாப்புக்காக மக்களுடனே செல்லும். நீங்கள் நள்ளிரவு கூட சாலையில் போலீஸ் ஜீப்புகள் இடை விடாமல் ரோந்து வந்து கொண்டிருப்பதைக் காணலாம்! ஏதாவது அபாயம் என்று போன் செய்தால் அடுத்த இரண்டு நிமிடங்களுக்குள் – எந்தப் பகுதியாயினும் – பாதுகாப்புப் படை வந்து விடும் என்கிற அளவுக்கு நெட்வொர்க் வலுவாக இருக்கிறது."

"அரசுத் தரப்பில் உங்களுக்கு ஒத்து ழைப்பு எப்படி?"

"மற்ற இடங்களோடு ஒப்பிட, கோவைக்கு ஏராளமான நிதி ஒதுக்கீடு செய்திருக்கிறார்கள். போன வருடம் மட்டும் 47 புதிய ஜீப்புகள், மூன்று கார்கள், ஆறு மினி பஸ்கள், இருபத்தி மூன்று லட்சம் மதிப்புள்ள வாட்டர் கேலன் பீரங்கி ஆகியவற்றைத் தந்திருக்கிறார்கள். கூடுதலாக இரு காவல் நிலையங்கள் அமைக்கவும் அனுமதி கொடுத்தது – இதெல்லாம் மக்கள் மத்தியில் பெரும் நம்பிக்கை ஏற்படுத்தியிருப் பதை அனுபவபூர்வமாக உணர்கிறேன்."

"வழக்குகள் எப்படிச் செல்கின்றன? தீர்ப்புகள் வர ஆரம்பித்திருக்கின்றனவே?"

"இது மிக முக்கியமான விஷயம். பதி னாறு கொலை வழக்குகள் சமீபத்தில் விசா ரணைக்கு வந்து, பதினாறு குற்றங்களும் நிரு பிக்கப்பட்டு விட்டன. இது ஒரு குறிப்பிடத் தகுந்த சாதனை ஆகும். பல வழக்குகளில் போதிய சாட்சியமின்றி ஒருசில குற்ற வாளிகள் விடுதலையாகி விடுவார்கள். நாங் கள் தீர்மானமான சாட்சியங்களுடனே வழக்கைச் சந்திக்கிறோம் என்பதும் இதன் மூலம் மக்களுக்குத் தெரியவந்துள்ளது."

"இரவு பகல் பாராமல் உழைக்கும் காவ லர்களின் சொந்த நலனை கவனிக்கிறீர் களா? அவர்கள் திருப்தியாகப் பணிபுரி கிறார்களா?"

"நீங்களே யாரை வேண்டுமானாலும் சந் தித்துப் பேசுங்கள். கோவையிலுள்ள இரண் டாயிரம் போலீசாருடன் கடந்த இருபது மாதங்களில் தனித்தனியே ஆறு முறை நான் நேரில் சந்தித்துப் பேசியிருக்கிறேன். அவர் களது தேவைகள் எதையும் நான் புறக்கணிப் பதில்லை. காவலர்களுக்கென பிரத்யேக நூலகம், அவர்கள் குழந்தைகளுக்கென கம்ப்யூட்டர் சென்டர் தொடங்கியிருக் கிறோம். போன பொங்கல் சமயம் போலீஸ் குவார்ட்டர்ஸிலுள்ள அத்தனை வீடுகளுக் கும் டிபார்ட்மெண்ட் செலவில் ஒயிட் வாஷ் செய்து தந்ததில் எல்லாருக்கும் எத்தனை மகிழ்ச்சி தெரியுமா? நான் என் ஆபீசர்களுக்



**''என்னது! தேளும் பூரானும் உங்களை ஒரே சமயத்தில் கடிச்சுட்டதா! அப்படி எங்கே சார் போனீங்க?''**

**''கொஞ்சம் வேலை செய்யலா மேன்னு ஆபீஸ்ல ஒரு ஃபைலை எடுத் தேன் டாக்டர்!''**

**– புளியரை கணேசன்**

கும் ஊழியர்களுக்கும் அடிக்கடி சொல்வது இதுதான் : 'சிக்கல் மிகுந்த நேரத்தில் வீட்டை மறந்து விடுங்கள். பிரச்னை இல் லாத சமயமா? ஜாலியாக குடும்பத்தைக் கவ னியுங்கள்!' கோவை நகரில் அமைதியை மீட்கப் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல. அந் தப் பெருமை இங்குள்ள ஒவ்வொரு காவலர் நெஞ்சிலும் நிலைத்திருக்கிறது. கிடைத்த நல்ல பெயரைத் தக்கவைத்துக் கொள்ளும் விதமாகவே அவர்கள் உழைக்கிறார்கள். மக் கள் எங்கள் பணியை அங்கீகரித்திருக்கிறார் கள் என்பதுதான் மிகப் பெரிய பரிசு."

பேட்டி : **ஔரங்கசீப்**

படங்கள் : **வெங்கடேஷ்**

எதிரே வளைவு வளைவாகக் கிடக்கிற தைப் பாம்பு என்று நினைத்துக் கொண்டி ருக்கையில் அதை மிதித்தபடியே ஒருத்தர் நடந்து வருகிறார். வந்தவரைப் பார்த்து இவர் கேட்கிறார் - "அது என்னது?"

"வைக்கோலால் திரிக்கப்பட்ட கயிறு ஒன்று அங்கே இருக்கிறது. வேறு ஒன்று மில்லை" என்கிறார்.

இவர் போய் அதை எடுத்துப் பார்த்தார். கயிறுதான் இருக்கிறது! உண்மைப் பொருள் என்ன அங்கே..? கயிறுதான். கயிறு என்ற ஞானம் ஏற்பட்ட பிற்பாடு, இத்தனை நேர மாக இருந்த மனப்பிராந்தியெல்லாம் போய்விடுகிறது.

அதுபோன்று பரபிரும்ம தரிசனம் ஏற்பட்டதானால் மீதி யெல்லாம் வெறும் தோற் றம் என்பது தெரிந்து போய்விடும்.

அந்தக் கயிறு ஒன்றுதான் சத்யம் என்பது எப்படித் தெரிகிறதோ அந்த மாதிரி பரபிரும்மம் ஒன்றுதான் சத்யம் என்பதை உணர முடியும். மீதி எல்லாம் தோற்றம்தான். அவன் ஒருவன்தான் சத்யம்.

வியவகாரத்தில் அவன், இவன், அவர், இவர் - அது - இது என்றெல்லாம் சொல் கிறோமே, இதெல்லாம் உண்மையே அல்ல. வெறும் வியவகாரம்தான். அந்த பிரும்மம் ஒன்றுதான் சத்யம். மீதியெல்லாம் மாயா, அவித்யையினாலே ஏற்பட்ட விகாரங்கள்.

அவித்யா (அறி வின்மை) என்பது ஒரு கண்ணாடி. மாயா என்பது ஒரு கண் ணாடி. பகவான் என்ன பண்ணுகிறான்...? அவித்யா என்கிற கண் ணாடிக்கு நேரே வரு கிறான். அந்தக் கண்ணாடியிலே ஒரே அழுக்கு! அழுக்குப் படிந்த கண்ணாடி முன் நாம் நின்றால், நம் உடலே அழுக்காகத் தெரிகிறது. அந்த மாதிரி இந்த விகாரங்கள் தோன்றுகின்றன. இவை உண்மை அல்ல. இத்தனை வஸ்துக்களாகத் தோன்றுவதெல் லாம் உண்மையல்ல. உண்மை, பரபிரும்மம் மட்டுமே. - இதெல்லாம் வெறும் தோற்றம் தான்.

உயர்ந்த முத்துக்குப் பக்கத்திலே செம் பருத்திப் பூவை வைத்தால், இதனுடைய நிறம் அதற்கு எப்படி அடிக்கிறது...! உண் மையில் பூவின் நிறம் முத்துக்கு உண்டா? என்றால் கிடையாது.

பளிங்குக் கற்கள் பக்கத்திலே அதை வைத்தால், அதே செம்பருத்தியின் நிறம் பளிங்குக் கற்களில் தெரியும்.

அந்த மாதிரிதான் இது. உலகப் பொருள் கள் எதுவும் சம்பந்தம் இல்லை; பகவான் ஒருவன்தான் சத்யம் என்று சொன்னார்கள், தத்வமஸி என்கிற வாக்யத்திலே.

எல்லாம் பிரும்மம் என்று இவ்வாறு சொல்வது அபேத ஸ்ருதி.

# 45

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

# குறையொன்

ஆக, ஒரு ஸ்ருதி பேதமாகச் சொல்கிறது; மற்றொன்று அபேதமாகச் சொல்கிறது. மூன்றாவது கடகஸ்ருதி அல்லது அந்தர் யாமி பிராமணம்.

பேதம், அபேதம் இரண்டையும் சமன் வயப்படுத்துகிறது கடக ஸ்ருதி. - சேர்த்து வைக்கிறது. பேத - அபேத ஸ்ருதிகளைச் சேர்த்து வைத்துப் பொருள் கூறுவதற்கு உயர்ந்ததான அந்தர்யாமி ஸ்ருதி நமக்கு உபகாரம் பண்ணுகிறது.

அந்தர்யாமி ஸ்ருதி என்ன பண்ணுகிறது?

எவனுக்கு இந்த உலகமெல்லாம் சரீர மாக இருக்கிறதோ,

எவன் இவற்றுக்குள்ளே உறை கிறானோ, எவன் மனத்துக்குள்ளே இருக்கிறானோ, எவன் சராசரங்களுக் குள்ளே அனைத்திலேயும் இருக்கிறானோ, இவை அனைத்தையும் எவன் சரீரமாக உடையவனோ அவனை நீ உணர் என் கிறது.

சரீர - சரீரீ பாவமானது இந்த அந் தர்யாமி பிராமணத்தினாலே கிடைக் கிறது.

சர்வாந்தர்யாமியாக பரமாத்மா இருக்கிறான் என்பது இதன் மூலமாக ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. இந்த ஸ்ருதியை எடுத்து பேதா பேத ஸ்ருதிகளை சமன்வயம் பண்ணுகிறார் பகவத் பாஷ்யக்காரர் ராமானுஜர் – பிரும்ம சூத்ர பாஷ்யத்திலே. அதன் மூலம் விசிஷ்டாத்வைதத்தைக் காட்டினார்.

பேத ஸ்ருதியினாலே த்வைத மதாசார்யர் ஆனந்த தீர்த்தர் அது வேறு, இது வேறு என்பதைக் காட்டினார்.

அபேத ஸ்ருதியினாலே ஆதி சங்கர பகவத் பாதாள் அத்வைதத்தை நிலைநாட்டினார்.

இப்படி மூன்று மதங்கள் தோன்றுவதற்கு மூன்று ஸ்ருதி வாக்யங்கள் காரணமாக அமைந்தன.

நரசிம்ஹ அவதாரத்தை எடுத்துக் கொண்டோமானால், ஸ்தம்பம், அதற்குள்ளேயிருந்து தோன்றின பகவான், எதிரிலே பிரஹலாதன், இந்தப் பக்கம் ஹிரண்ய கசிபு – பிரஹலாதன், ஹிரண்ய கசிபு இவர்களெல்லாம் சேதனர்கள். ஆத்ம வஸ்துக்கள். அறிவை உடையவர்கள் – 'சித்' என்று சொல்லக் கூடிய பிரிவில் வருபவர்கள்.

# மில்லை

ஸ்தம்பம் இருக்கிறதே, அது அறிவற்றது – அசித். சேதனரான பிரஹலாதனுக்கும் அசித்தான ஸம்பத்துக்கும் ஈச்வரன் யார்? உள்ளேயிருந்து வந்தவன்தான்!

ஆகையினாலே சித் – அசித் – ஈச்வரன் என்கிற தத்துவ த்ரயம் இந்த அவதாரத்திலே ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

அதனால்தான் விஷ்ணும் உக்ரம் நமாமி அஹம் என்று பரமேச்வரனே கொண்டாடுகிறார்.

'ஸ்ரீ ஈச்வரௌவாச' என்று ஆரம்பித்து பன்னிரண்டு சுலோகங்கள் மந்திர ராஜ பத ஸ்தோத்திரத்திலே. இவற்றிலே, சர்வக்ஞனான ஸ்ரீ ருத்ர பகவான் கொண்டாடுகிறார்.

## அருள்வாக்கு

அந்தக் காலத்தில் எல்லா சாஸ்திரி

ஈச்வரருக்கு சர்வக்ஞன் என்று பெயர். எல்லாம் அறிந்தவர். மஹா ஞானி. அப்படிப்பட்ட ஈச்வரன், விசேஷமாக ஸ்தோத்திரம் பண்ணுகிறார் மஹாவிஷ்ணுவை. இதைக் காட்டிலும் வேறு பிரமாணம் உண்டா!

சில ஸ்தோத்திரங்கள் இருக்கின்றன. ஒரு சிலருக்குத்தான் அவை உபயோகமாக இருக்கும். சம்பிரதாயத்திலே பல ஸ்தோத்திரங்கள் – இது இவரால் சொல்லப்பட்டது; அது அவரால் சொல்லப்பட்டது; அவரை இவர் சொன்னார், இவரை அவர் சொன்னார் – இது நமக்கு உத்தேசமில்லை. இது நம் ஆசார்யர் சொன்னது; என்று பிரித்துப் பார்த்து, ஆசார்யாபிமானத்தினாலே இந்த ஸ்தோத்திரம் அந்த ஸ்தோத்திரம் என்று நாம் அபிமானிப்போம்.

ஆனால், இந்த மந்திரராஜபத ஸ்தோத்திரம் இருக்கிறது பாருங்கள், எல்லா ஆசார்யர்களாலேயும் கொண்டாடப்பட்ட ஸ்தோத்திரம். அந்த ஸ்தோத்திரத்துக்கு இருக்கக்கூடிய விசேஷமே இதுதான். அதை சங்கர பகவத்பாதாள் மிகவும் போற்றி, மேற்கோள் காட்டிச் சொல்கிறார் தமது பாஷ்யத்தில். ஆனந்த தீர்த்தரும் இந்த ஸ்தோத்திரத்தைக் கொண்டாடி – ஈச்வரனால் அனுக்கிரஹிக்கப்பட்ட இந்த ஸ்தோத்திரத்தைக் கொண்டாடி மேற்கோள் காட்டுகிறார். அதே மாதிரி பாஷ்யக்காரரான ராமானுஜர், சுவாமி தேசிகன் எல்லோருமே இந்த ஸ்தோத்திரத்தை மேற்கோள்காட்டுகிறார்கள். இந்த ஸ்தோத்திரத்தின் ஏற்றத்தைச் சொல்லி முடியாது.

மிகவும் உயர்ந்ததான இந்த ஸ்தோத்திரத்தை அதிகாலையிலேயும் மத்தியானத்திலும் சாயங்காலமும் சொன்னால் என்ன பலன் என்று ஈச்வரனே அதற்குப் பலச்ருதி சொல்கிறார் :

'மூன்று சந்தியா காலங்களிலும் யார் இதைச் சொல்கிறார்களோ', என்று ஆரம்பித்துச் சொல்கிறார்.

ஸ்ரீ : வித்யா ஆயுஸ்ச வர்ததே!

'ஈச்வரௌவாச' என்று இந்த பலஸ்ருதி ஆரம்பிக்கும். சங்கரனே பலஸ்ருதி சொல்கிறான். 'நான் சொல்கிறேன்' என்று ஆரம்பித்துச் சொல்கிறான்.

சங்கரன் என்றால் யார்?

சம் – மங்களம். கரோதி – உண்டு பண்ணுதல். மங்களம் உண்டு பண்ணுபவன் சங்கரன்.

மங்களத்தைக் கொடுக்கக்கூடிய நான் சொல்கிறேன். என் வாக்கில் நம்பிக்கை வையுங்கள் என்று ஈச்வரனே கொண்டாடுகிறார்.

நிர்ப்பந்தத்திலே சொல்லப்பட்ட ஸ்தோத்திரமில்லை. ஆதராபிமானத்தோடு, நரசிம்ஹனிடத்திலே இருக்கும்படியான பெருமையை ரொம்ப ஆதராபிமானத்தோடு சொல்கிறார் அவர்.

ஆகவே நாமும் இந்த ஸ்தோத்திரத்தைப் பாராயணம் பண்ணுகிறபோது உத்ஸாஹத்துடன் சொல்ல வேண்டும். 'எப்போதடாப்பா முடியப் போகிறது!' என்ற வெறுப்போடு இதைச் சொல்லக் கூடாது. முதல் ஆவர்த்தி சொல்கிறபோது என்ன உத்ஸாஹம், சந்தோஷம் இருந்ததோ, கடைசி ஆவர்த்தி சொல்கிற நேரத்திலும் அதே சந்தோஷம் இருக்க வேண்டும். அப்படித்தான் இதைச் சொல்ல வேண்டும். அப்படி யார் இதைச் சொல்கிறார்களோ, அவர்களிடத்திலே பகவான் ரொம்ப விசேஷமாக அனுக்கிரஹம் பண்ணுவான்.

இப்படிச் சொல்லி 32 ஆவர்த்திக்கும் மட்டப்பள்ளியிலே வந்து பிரதக்ஷிணம் பண்ணச் சொல்கிறான் பகவான்.

ஒருத்தர் தலைவலி என்கிறார். ஒருத்தர் வயிற்று வலி என்கிறார். ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு கோரிக்கை இருக்கிறது. பல கோரிக்கைகள்.

பகவான் மட்டப்பள்ளிநாதன் ஆரம்பிக்கிறபோதே ஒரு வைத்தியம் சொல்லியிருக்கிறார். எப்படிப்பட்ட கஷ்டமாக இருந்தாலும் ஒன்று பண்ணுங்கள் :

பதினோரு நாட்கள் மட்டப்பள்ளியில் வந்து தங்கியிருங்கள். இருந்து, கிருஷ்ணா ஸ்நானம் காலையிலே ஒரு தடவை பண்ணுங்கள். பண்ணி, என்னை வந்து 32 பிரதக்ஷிணம் பண்ணுங்கள் – ஈர வஸ்திரத்துடன்.

மறுபடியும் மத்தியானம் போய் கிருஷ்ணா ஸ்நானம் பண்ணுங்கள். 32 பிரதக்ஷிணம் பண்ணுங்கள். சாயங்காலம்

கரிசக்காடும் அந்த ஓட்டுச் சாய்ப்பு வீடுமே கண்ணுக்குத் தெரிந்தது.

திருமணமான புதிதில் அவன் அவளைப் பற்றி ஒன்றும் நினைக்கவில்லை. நகரத்துக்குக் குடிபெயர்ந்த பின்புதான், ஆள் மாறிப் போனான். நகரத்துப் பெண்களுடன் அவளை ஒப்பிட்டுப் பார்த்துவிட்டு அவளின் நாகரிகம் போதாமை எண்ணிக் கவலையடைந்தான். அவளை வளைத்து, குறுக்கி 'நாகரிகம்' என்ற வளையத்திற்குள் திணித்து விட, கூடுமான வரை முயன்றும் அவனால் வெற்றி பெற முடியவில்லை!

அவன் எப்பவாவது அவளை வெளியில் அழைத்துச் செல்ல நேர்கையில், அவன் வயதொத்த பெண்களைக் கண்டுவிட்டால் போதும். "அவங்களப் பாரு! எப்படி பொம்பளையா, லட்சணமா இருக்காங்க. நீயும் இருக்கியே 'அய்யனார் ஆழி' கணக்கா!" என்று புலம்ப ஆரம்பித்தான்.



"உங்களுக்கு ஒவ்வொரு பேஷன்ட்டும் ஒரு யானை மாதிரின்னு சொல்றீங்களே, எப்படி டாக்டர்?"
"பேஷன்ட் இருந்தாலும் பீஸ்; இறந்தாலும் பீஸ்!"
— வெ. ராஜாராமன்

அவளுக்கு அவன் காட்டும் பெண்களைப் பார்க்கையில், 'ஐயோ பாவம்!' என்றுதான் இருக்கும். இப்படி 'சிமிட்டா'யிருந்தாத்தான் பொம்பளையாக்கும். 'சீக்காளி' கணக்காயில்ல இருக்காக. நானாயிருந்தா... இடுப் பொசரத்துக்கு புல்லுக்கட்டு கட்டி தூக்கி விட்டாலும் மலையாமச் செமப்பனே. இவுக என்னன்னா... ஒரு வெளக்கு மாத்துக் கட்டையக் கூட தூக்க 'சீவ'னத்துப் போயில்ல கெடக்காக.

உண்மையில் வெங்கிடம்மாவுக்கு அற்புதமான உடல்கட்டு. கை, கால்களெல்லாம் உழைத்து உரமேறி வைரம் பாய்ந்திருக்கிறது. நிமிர்ந்த தோள்கள். நேரான பார்வை. முழுமையான பெண்மையின் வடிவம்.

பண்டாரச்சாமிக்கோ 'முழுமை' பிடிக்கவில்லை. 'பகுதி' மட்டுமே அவனுக்குப் போதுமானது. அவனைப் பொறுத்தவரையில் பெண் என்பவள் கைக்கு அடக்கமாகக் குனிந்த தலைநிமிராத கோணல் பார்வையுடன் தன் விளையாட்டிற்கேற்ற ஒரு பொம்மையாக இருக்க வேண்டும். பெண் ஓர் அழகுப் பொருள் அவ்வளவுதான்.

தொல்சீர் சமூகத்தில் பெண், ஆலமரமாய்த் தழைத்து, ஒரு கூட்டத்தையே தன் நிழலில் வைத்துப் பாதுகாத்த தலைமைப் பொறுப்பில் இருந்தவள். நாகரிகச் சமூகம், அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் கொலைக் கருவிகள் கொண்டு அத் தாய் மரத்தின் கிளைகளை வெட்டிச் சிதைத்து, வீட்டிற்குள் தொட்டியில் வளர்த்து அழகு பார்க்கும் 'போன்சாய்' மரமாக்கி விட்டது!

வெங்கிடம்மா தனது கிளைகளை இழந்து விடாமல் காட்டு ஆலமரமாய்ப் படர்ந்து நின்ற விதம்தான் அவனுக்குப் பிடிக்கவில்லை.

வெங்கிடம்மாவின் நிலையோ வேறுவிதமாக இருந்தது. குடிவந்து ஒரு வருடம் ஆகியும் அவளுக்கு நகர நாகரிகம் இன்னதென்று பிடிபடவில்லை. அண்டை அயலுடன் பேசிப் பழகிக் கொள்ள வேண்டுமென்று நினைத்தாள். பண்டாரச்சாமி அதற்கெல்லாம் அனுமதிக்கவில்லை. "நீ பாட்டுக்கு வீடு வீடாப் போயி 'பொரணி' பேசிட்டிருக்க நம்ம 'ஊரு'ன்னு நெனைச்சியா? நாலு பேரைப் பார்த்தாவது நாகரிகமா நடந்துக்கோ."

என்ன நாகரிகமோ? கிராமத்தில் என்றால் ஆயிரம் வீடிருந்தாலும் அனைவரும் 'தாயா பிள்ளையா' பழகுவார்கள். மேலத் தெரு குருசாமி மாமாவோட தாத்தாவுக்கு என்னைக்கு 'தெவச'மின்னு கீழத்தெரு கட்டியாரம் சித்தப்பாவுக்குத் தெரியும். இங்க என்னான்னா... பக்கத்து வீட்டுல யாரு இருக்காங்கன்னு கூடத் தெரியல. இதான் நாகரிகமாக்கும். நாளைக்கு ஒரு ஆத்திர வசரத்துக்கு என்னதாஞ் செய்வாகளோ?

ஒருவழியாக பண்டாரச்சாமி தனது அலங்காரத்தை முடித்துக் கொண்டு அவளுடன் வீட்டை விட்டுக் கிளம்ப மணி பத்தாகி விட்டது!

வழிநெடுகிலும் போகுமிடத்தில் அவன்

எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது பற்றி கிளிப்பிள்ளைக்குச் சொல்வது போல் சொல்லிக் கொண்டே வந்தான். ஒரு கட்டத்திற்கு மேல் அவளுக்கு எரிச்சலாக வந்தது. அவனை அப்படியே இழுத்து உட்கார வைத்துத் தலையில் நாலு 'மொட்டுக்கா' வைக்கலாமா என்றிருந்தது. "சும்மா சொன்னதையே சொல்லாதய்யா. அவுகவுகளுக்கு இருக்குற மருவாதி இருக்கும். 'பெருமைக்கு மாவிடிச்சா ஒரலுக்குத்தான் சேதம்!' தெரிஞ்சுக்கோ!" என்றாள் எரிச்சலுடன்.

பண்டாரச்சாமி வேலை பார்க்கும் அலுவலகத்தில், உயர் அதிகாரியின் மதனியார் மகளுக்கு திருவில்லிபுத்தூர் அருகே ஏதோ ஒரு கிராமத்தில் திருமணமாம்! அதிகாரியும் அவர் மனைவியும் திருமணத்திற்குச் செல்ல வேண்டியிருந்தது. அவர் இரண்டு நாள் முன்பு, அவன் தன் மனைவி சகிதமாக தமது மதனியார் வீட்டுத் திருமணத்திற்குத் தங்களுடன் அவசியம் வர வேண்டும் என்று அவனுக்கு 'அன்பு'க் கட்டளையிட்டிருந்தார். அவனும் அவன் மனைவியும் முறையே தமக்கும் தம் மனைவிக்கும் போகுமிடத்தில் 'எடுபிடி' வேலை செய்யத் தோதாக இருப்பார்கள் என்று கருதியே அவர் அழைத்திருந்தார்.

அவ்வளவுதான். அவனுக்குக் கால் தரையில் பாவவில்லை. அலுவலகத்தில் அத்தனை பேர் இருக்க, அதிகாரி தன்னை மட்டும் உடன் அழைக்கக் காரணம் தன்னுடைய நம்பகத்தன்மையும் கௌரவமான தோற்றமும்தான் என்று அவனாகக் கற்பனை செய்து கொண்டான். வெங்கிடம்மாவையும் உடன் அழைத்து வரச் சொன்னதுதான், ஆசையாகக் கருவாடு சாப்பிடும் போது தொண்டையில் முள் மாட்டிக் கொண்டது போல் நெருடலாக இருந்தது. அவளின் பட்டிக்காட்டுத்தனமான நடவடிக்கைகளால் தனது 'மருவாதி'க்கு குந்தகம் வந்து விடுமோ என்று அஞ்சினான்.

அவர்கள் அதிகாரியின் வீட்டையடைந்த போது, அவரும் அவர் மனைவியும் புறப்பட்டுத் தயாராக இருந்தார்கள். அந்த அம்மையார் கழுத்து தெரியாத அளவுக்கு நகைகள் அணிந்திருந்தார். அவரைப் பார்த்தவுடனேயே வெங்கிடம்மாவுக்குப் புரிந்து விட்டது. இதுவும் தன் புருசனைப் போல் 'பெருமைக்கு மாவிடிக்கிற' பொம்பளைதான் என்று.

பண்டாரச்சாமி போய், ஆட்டோ பிடித்துக் கொண்டு வந்தான். நால்வரும் பேருந்து நிலையம் சென்றார்கள். பேருந்து நிலையத்தில் காத்திருந்த பொழுது ஒரு எட்டு வயது மதிக்கத்தக்க சிறுமி, இவர்களிடம் 'தருமம்' கேட்டு வந்தாள். அச் சிறுமியின் தோற்றமும் அணிந்திருந்த உடையும், பார்க்கப் பரிதாபமாக இருந்தது. பண்டாரச் சாமிக்கு என்ன நல்ல குணமோ? ஒரு இரண்டு ரூபாய்க்கு 'தருமம்' செய்யலாம் என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டு பைக்குள் கையை விட்டான். அப்பொழுது...

"வெளியே வந்தாலே இவங்க தொல்லை தான். இவங்கள 'என்கரேஜ்' பண்ணவே கூடாது. சோம்பேறிங்க. வீட்டு வேலைக்குக் கூப்பிட்டா வர மாட்டாங்க" என்று அம்மையார் திருவாய் மலர்ந்தார்.

உடனே பண்டாரச்சாமி பைக்குள்



"என்னது... உங்க படத்தோட கதையை என் கதைன்னு சொல்லி கேஸ் போடணுமா? எதுக்கு சார்?"
"படத்தை பிரபலப்படுத்தி ஓட்ட எனக்கு வேற வழி தெரியலை சார்!"
– சீர்காழி ரேவதி

இருந்து கையை, தேள் கொட்டியது போல் 'வெடுக்'கென்று உருவிக் கொண்டான்.

"ஆமாங்க மேடம்! இவங்களுக்கெல்லாம் அஞ்சு பைசாக் கூடப் போடக் கூடாது!" என்றான்.

வெங்கிடம்மாவுக்கு இப்பவும் சிரிப்புத் தான் வந்தது. உதடு பிரியாமல் சிரித்துக் கொண்டாள்.

பேருந்தில் வெங்கிடம்மா, 'அம்மையாரின்' அருகில் அமர வேண்டியதாகி விட்டது. ஆண்கள் இருவருக்கும் பின்பகுதியில் தனித்தனியாகத்தான் இடம் கிடைத்தது.

அம்மையார் அவ்வளவு நகைகள் அணிந்திருந்தும் அதைப் பற்றி அவள் இதுவரையி

## ரோஜாவுக்கு ஒரு கவிதை!

'ஏழையின் சிரிப்பில்' என்கிற கோடம்பாக்க வாசனையடிக்காத படமொன்று கோடம்பாக்கத்தில் தயாராகி வருகிறது. கே. சுபாஷ் இயக்கும் இப்படம் பற்றி செய்தி



எதுவும் வெளியில் தெரியாத நிலையில் ஸ்டில்லுக்குப் பொருத்தமான ஒரே ஒரு சிறு வரி (ரோஜாவுக்கு :)

விற்கிற டிக்கெட்டில்
ஒன்று அடித்தால்
உன் கடன் தீர்ந்திடுமோ?
நிற்கிற இடத்தில்
நிலைத்து நின்றிட
விற்பனை உதவிடுமோ?

லும் விசாரிக்காமல் இருந்தது அவருக்குப் பெருத்த ஏமாற்றமாகப் போய் விட்டது. இவள் என்ன பொம்பளைதானா? இவள் ஏதாவது நகையைப் பற்றிக் கேட்டால்தானே பெருமை அளக்க முடியும்? அவளுக்கு வெங்கிடம்மாவின் மீது கோபங் கோபமாக வந்தது. பிறகு, 'கழுதைக்கு என்ன தெரியும் கற்பூர வாசனை?' என்று மனத்தைத் தேற்றிக் கொண்டு பேசாமல் இருந்தார்.

அம்மையார் சரியாக முகம் கொடுத்துப் பேசாமலிருந்தது, வெங்கிடம்மாவுக்கு, என்னவோ போல் ஆகிவிட்டது! அவளுக்கு, முதலிலேயே அவர்களுடன் திருமணத்திற்கு வரச் சம்மதமில்லை. பண்டாரச்சாமி கேட்டால்தானே? அதிகாரி என்ற முறைக்கு, அவன் வேண்டுமானால் போகலாம். இவள் எதற்கு? நாய் வேஷம் போட்டால் 'குரை'த்துத்தான் ஆக வேண்டும். அவன் போட்ட வேசத்திற்கு இவளும் சேர்ந்து அல்லவா 'குரை'க்க வேண்டியதாகி விட்டது.

பேருந்து வேகமெடுத்தவுடன், அம்மையார் தூங்க ஆரம்பித்து விட்டார். வெங்கிடம்மா தற்செயலாக பேருந்தினுள் 'நோட்டம்' விட்டாள். அத்தனை பேரும் அம்மையாரையே வேடிக்கை பார்ப்பது போலிருந்தது.

எதுக்கு இந்தம்மா இம்புட்டுச் சங்கிலியப் போட்டுக்கிட்டு வரணும்? இருந்தா... பெட்டியில பூட்டி வச்சிட்டு வர வேண்டியது தானே? ஏதாவது 'அகஸ்மகஸ்'த்து ஆயிரிச்சின்னா என்ன செய்வாக? உம்... ஊரு உல ந்துல பொம்பளைப் பிள்ளைக, ஒரு கம்மல், மூக்குத்தி கூட இல்லாம 'கொமரு' ஈடேறாமக் கெடக்காக. இவுக என்னன்னா... இப்படி கழுத்தொடியச் சங்கிலி போட்டுக்கிட்டு, அமஞ்செலை கணக்கா ஊரு வெளையாடிட்டில்ல வாராக! 'உழப் போறவனுக்கு ஊத்தைக் கஞ்சியும் ஊறுகாவுமாம்; ஊரைச் சுத்தப் போறவனுக்கு, உளுந்தஞ் சோறும் உறி நெய்யுமா'ம்ன்னு சொன்னவுக வாயில சீனிதாம் போடணும்!

பேருந்து அத்துவானக் காட்டில் போய்க் கொண்டிருந்த பொழுது திடீரென்று இரண்டு பேர் கையில் பெரிய அரிவாளுடன் எழுந்தார்கள். ஒருவன் ஓட்டுனரை மிரட்டி பேருந்தை நிறுத்தினான். மற்றவன், "யாராவது இடத்தை விட்டு அசஞ்சீங்க" என்று மிரட்டி விட்டு அரிவாளால் சன்னல் கண்ணாடியில் 'மாதிரிக்கு' ஒரு வெட்டு வெட்டிக் காட்டினான். பேருந்து முழுதும் நிசப்தமாக இருந்தது.

அடுத்த சில நிமிடங்களில் வெங்கிடம்மாவும் அம்மையாரும் அரிவாள் முனையில் பேருந்திலிருந்து இறக்கப்பட்டு, காட்டுப் பகுதிக்குள் நடத்திச் செல்லப்பட்டார்கள்.

அதன் பிறகுதான் பண்டாரச்சாமிக்கு வாய் வந்தது போலும். "பட்டப் பகல்ல பொம் பளைங்கள கடத்திட்டுப் போறாங்களே? வண்டியில் யாருமே ஆம்பிளைங்க இல் லையா?" என்று பரிதாபமாகக் கத்தினான்.

பேருந்தில், அவர்கள் இருவரைத் தவிர பயணிகள் அனைவருமே ஆண்கள்தான். ஒருவருக்கும் உணர்வில்லை. தத்தம் உடை மைகளை மறைத்து வைப்பதிலேயே கவன மாக இருந்தார்கள். 'நல்லவேளை! நம்மை ஒன்றும் செய்யவில்லை!' அந்த நேரத்திலும் சிலர் உள்ளூர ஆசுவாசப்பட்டுக் கொண் டார்கள். தான் தப்பித்தால் போதும் என்ற சுயநலம். தனக்கு எதிராக நிகழாதவரையில், எதுவும் அநீதியாகத் தெரிவதில்லை. பயணி கள் அனைவரும் ஒன்றுசேர்ந்தால் கொள் ளையர்களை 'சந்து வேறு சாணி வேறாக' ஆக்கியிருக்க முடியும். குழுவாகச் சேர்ந்து செயலாற்ற வேண்டிய நிலைமைகளில் தனிநபர் மனப்பான்மையுடனும், தனித்துச் செயலாற்ற வேண்டிய நிலைமைகளில் மந்தை மனப்பான்மையுடனும் செயலாற்று வதுதானே நம் மக்களுக்கு இயல்பு!

அது ஒரு மரங்கள் அடர்ந்த காடு என்று சொல்ல முடியாது. சிறு சிறு செடிகளும் புதர்களுமாய் 'பாம்பு' போல் காட்சி யளித்தது. சுத்துப்பட்டில் ஊர் இருப்பதற் கான 'அலுக்கம்' எதுவும் இல்லை.

கொள்ளையர்கள் மிகுந்த எச்சரிக்கை உணர்வுடன் செயலாற்றினாலும், யாரும் வந்து விடுவதற்குள் காரியத்தை முடித்து விட வேண்டும் என்ற அவசர உணர்வும் அவர்களுக்கு இருந்தது.

ஒருவன் சற்றுத் தள்ளியிருந்த மேட்டுப் பகுதியில் நின்று கொண்டு யாரும் வருகிறார் களா என்று 'ஆள்' பார்க்க, மற்றவன் பெண் களிடம் நகைகளைக் கொள்ளையடிப்பதில் மும்முரமானான்.

'அம்மையார்' எவ்விதத் தயக்கமோ எதிர்ப்போ இன்றி தாமாகவே நகைகளைக் கழற்றிக் கொடுக்க ஆயத்தமானார். வெங்கிடம்மாவுக்குத்தான் மனது அடித்துக் கொண்டது. "அடி, பாதகத்தி! அந்தப் பச்சப் புள்ளைக்கி ஒத்த ரூபா தருமஞ் செய்ய ஒனக்கு மனசு வரலை. இப்பம் இப்படி அநியாயத்துக்கு அள்ளிக் கொடுக்க எப் படித்தாம் மனசு வருதோ?" மனத்துக்குள் பதைபதைத்துப் போனாள்.

கொள்ளையன், 'அம்மையாரை' 'மூளி'யாக்கி விட்டு இவளிடம் திரும்பி னான்.

''என்னடி, மொறைக்கிறே? ஒனக்கு தனியாச் சொல்லணுமா?''

"ஆமாம், புஞ்சையே போயிருச்சி. இப்பம் 'பூட்டை' போறதப் பத்தித்தான் கவலை யாக்கும்?" கழுத்தில் கிடந்த இரண்டரைப் பவுன் தாலிக் கொடியைக் கழற்றி அவன் கையில் எறிந்தாள்.

"என்னடி திமிரா? பொட்டச்சியேன்னு பார்க்கிறேன். ஒழுங்கு மருவாதியா நடந் துக்கோ!" என்றவனின் பார்வை, அவள் கால் கொலுசின் மீது நிலைத்தது. அவள் கொலுசைக் கழற்ற ஆரம்பித்தாள். திருகு வசமாக மாட்டிக் கொண்டிருக்க வேண்டும். கழற்ற வராமல் அடம்பிடித்தது.



''வரவர டி.விகாரங்க தொல்லை தாங்க முடியலை...''

''என்ன?''

''ஒரு விளம்பரத்தைப் போட்டுட்டு இந்த விளம்பரத்தை வழங்கியவர்னு சொல்லி இன் னொரு விளம்பரம் போடறாங்க!''

– பா. ஜெயக்குமார்

கொள்ளையனுக்கு அவசரம் பொறுக்க முடியவில்லை. ''என்னடி நடிக்கிறே?'' என்றவன், ''தள்ளுடி'' என்று சொல்லி விட்டு அவனே கொலுசை கழற்றத் துணிந் தான். ஆத்திரக்காரனுக்கு புத்தி மட்டு தானே? ஒரு கையால் அரிவாளை வைத்துக் கொண்டு மறு கையால் அவனாலும் கொலு சைக் கழற்ற இயலவில்லை.

அப்பொழுதுதான் அவன் அந்தத் தவறைச் செய்தான். அல்லது பெண்கள் தானே என்று இளப்பமாக எண்ணியிருக் கலாம். அரிவாளை காலுக்கடியில் மிதித்துக் கொண்டு, இரண்டு கைகளாலும் திருகைக் கழற்ற ஆரம்பித்தான். அரிவாளின் முனைப் பகுதிதான் காலுக்கடியில் இருந்தது. கைப்பிடியும் மற்ற பகுதியும் ஒரு அடி நீளத் திற்கு வலப் பக்கம் நீட்டிக் கொண்டிருந்தது!

வெங்கிடம்மாவுக்கு கண்ணிமைக்கும்

நேரமே போதுமானதாக இருந்தது. வினாடிக் கும் குறைவான நேரத்தில் குனிந்து அரி வாளைக் கைப்பற்றினான்! கொள்ளையன் நிலைமையுணர்ந்து சுதாரித்து நிமிர்வதற்குள் அரிவாளை அவனது இடது தோளில் இறக்கினாள்.

'ஆள்' பார்த்துக் கொண்டிருந்த மற்றவன் அவள் மீது பாய்வான் என்று எதிர்பார்த் தால், அவனோ அதற்கு மாறாக அந்தப் பக்கமாக இறங்கி ஓட்டமெடுக்க ஆரம்பித் தான்!

**கா**வல் நிலையத்தில் நால்வரும் ஆய்வாளர் முன்பாக இருக்கைகளில் அமர்ந் திருந்தனர். அதிகாரியும் அம்மையாரும் மழையில் நனைந்த கோழி போல் ஒடுங்கித் தலைகுனிந்திருந்தனர்! பக்கவாட்டில் பத்திரிக்கையாளர்கள் குழுமி இருந்தார்கள்! ஆய்வாளர் அவர்களுடன் உற்சாகமாய்ப் பேசிக் கொண்டிருந்தார்!

''அந்த இடத்துல இது நாலாவது சம்பவம் சார்... இதுவரைக்கும் நைட்ல நடந்திட்டிருந்தது. இந்தச் சம்பவம்தான் பகல்ல நடந்திருக்கு. இவங்க வந்து புகார் பண்ணின உடனே அதிர்ச்சி ஆயிட்டோம். ஸ்பாட்டுக்குப் போய் பார்த்தா இந்தம்மா அரிவாளும் கையுமா 'காளி' மாதிரி நிக்கறாங்க! அந்த வெட்டு மட்டும் கழுத்தில விழுந்திருந்தா ஆள் காலியாயிருப்பான்! உண்மையிலே இது வீரச் செயல்தான்!'' அவர் பாட்டுக்கு பேசிக் கொண்டேயிருந் தார்!

பத்திரிக்கையாளர்கள் வெங்கிடம் மாவை வேண்டுமளவு புகைப்படம் எடுத்துக் கொண்டார்கள்.

ஒரு பத்திரிகையாளர் பண்டாரச்சாமி யிடம் கேட்டார்.

"எப்படி சார்...? உங்க மனைவியைப் பற்றிச் சொல்லுங்களேன்!"

அவன் 'இருக்கை'யில் ஓய்வாகச் சாய்ந்து கொண்டு பேச ஆரம்பித்தான்.

"அவ சிறுசுலேர்ந்தே இப்படித்தான் சார். தைரியமா ஆண்பிள்ளைக் கணக்கா...'' பெருமையாகப் பேசத் தொடங்கியவனை ஆய்வாளர் கைவெட்டி இடைமறித்தார்,

"என்ன சார் ஆண்பிள்ளை கணக்கா? வண்டியில் அத்தனை பேரும் ஆண்கள் தானே இருந்தீங்க. என்னத்த கிழிச்சீங்க...?''

பண்டாரச்சாமி தலையைக் குனிந்து கொண்டான். ●

• செல்வபுரம் ஆக்கிரமிப்பு அகற்றல்



• "எங்கய்யா போவோம்?": பரிதவிக்கும் செல்வபுரம் பெண்மணி

"உங்கள் பிரச்னைகளைச் சொல்லுங்கள்; வந்து பார்க்கிறோம்" என்று எப்போது வாசகர்களிடம் கேட்டாலும் குறைந்தது ஆளுக்கு ஒரு டஜன் பிரச்னைகளையாவது பட்டியலிடுவதுதான் வழக்கம்.

இந்த முறை நடந்த கதையே வேறு. கோவை உள்ளாட்சி அமைப்பின் செயல்பாடுகள் குறித்து ஆராய வருவதாக அறிவித்ததும் வந்து குவிந்த வாசகர் கடிதங்கள் அனைத்தும் சொல்லிவைத்தாற்போல இரண்டே விஷயங்களைப் பற்றித்தான் பேசின. ஒன்று சாலை; இன்னொன்று சாக்கடை.

அட, சுகவாசிகளப்பா! வேறு பிரச்னையே இல்லையா என்று சொந்த சோகத்தில் சற்றே பொறாமையுடன் கோவைக்குச் சென்றால், மக்கள் எப்பேர்ப்பட்ட மன்னர்கள் என்பது விளங்கியது. அகத்தியர் கமண்டலத்தில் அடக்கிய காவிரி மாதிரி இந்த இரு விஷயங்களுக்குள் மிகப் பெரிய துர்நாற்றக் கேந்திரத்தையே அடக்கி

# தந்தையே! இப்படித் தனக்க ஜடலோமோ?

கோவை உள்ளாட்சி நிர்வாகம் – ஓர் அலசல்

• தில்லை நகர்: சாக்கடையே சாலையாக...!

வைத்திருக்கும் மாநகராட்சியின் கோர சொரூபத்தை தரிசிக்கும் பெரும் பாக்கியத்தைக் கொடுத்து விட்டார்கள். நினைவை விட்டு அகலக்கூடிய அனுபவமா அது? நினைவை விட்டு அகன்றாலும் மூக்கை விட்டு நகராத அனுபவம்!

## கேகே புதூரல்ல; கேகே குளம்!

“நீங்க இங்க போன மாசம் வந்திருக்கணும் சார். நடந்து வந்திருக்க மாட்டீங்க. நீந்தித்தான் வந்திருப்பீங்க!'' என்று நுழையும்போதே ஆர்.டி.எக்ஸ் வரவேற்பு அளித்தார் வினோத்ராம் என்கிற கே. கே. புதூர் அம்மாசிக் கோனார் வீதி வாசி.

கோவையில் அடித்த பேய் மழையில் குப்பகோனார்புதூர் என்கிற கே. கே. புதூரின் பல பகுதிகள் 'கேகே குளம்' ஆகி விட்டதன் அடையாள மிச்சங்களை அழைத்துச் சென்று காட்டினர் பகுதிவாழ் பெண்மணிகள்.

“இந்த அம்மாசிக்கோனார் தெருவோட அமைப்பே ரொம்ப சிக்கலானதுங்க. ரெண்டு எல்லையும் மேட்டுப்பாங்கான பகுதி. லேசா மழை அடிச்சாலே வீட்டுக்குள்ள தண்ணி வந்துடும். இங்க எல்லா வீடுங்களையும் பாருங்க. வாசப்படி ரெண்டடி தூக்கித்தான் கட்டியிருப்பாங்க. மழைக்காக மட்டும் இல்லீங்க. சாதாரண நாளிலேயே சாக்கடைத் தண்ணி போய்ச் சேர ஒரு வழி இடையாது. மழையும் சேர்ந்திடுச்

• ... காணோம்!' : ... நகர்வாசிகள்

சின்னு வையுங்க. கேக்கவே வேணாம்...'' என்று அல்லி என்கிற பெண்மணி பேசிக் கொண்டிருக்க, குறுக்கிட்ட நான்கைந்து பெண்கள் கோரஸாக, "இங்க பக்கத்து வீட்டுல ஒரு அம்மாவுக்கு உடம்பு கெட்டுப் போயி ட்ரீட்மென்ட் குடுத்துட்டிருக்காங்க. முழங்கால் அளவுக்கு சாக்கடைத் தண்ணி வீட்டுக்குள்ள வர்றதுன்னா, நாங்கள்ளாம் வாழுறதா? வேணாங்களா?'' என்றனர் ஆக்ரோஷமாக.



• வழி சொல்ல வேண்டியது யார்?: குமுறும் அம்மாசிக் கோனார் வீதிப் பெண்கள்



• பழனிச்சாமி லே-அவுட்: 'பார்க்'குக்குக் காத்திருக்கும் நிலம்!

''ஏங்க, உங்க துணைமேயர் வேலுச்சாமி இந்த ஏரியான்னுதான் சொன்னாங்க. அவருகிட்ட பேசினீங்களா?''

"நீங்க வேற. இந்தப் பிரச்னைக்கு வழி தெரியாமத்தான் அவரே வேற இடம் பார்த்துக்கிட்டுப் போயிட்டாருங்க!''

"உங்க கவுன்சிலர் என்ன செய்யறாங்க?''

''நீங்க வழி சொல்லுங்க. நாங்க தீர்த்து வைக்கிறோங்கறாங்க. வழி சொல்ல வேண்டியது யாருங்க? கமிஷனர், சேர்மன், கலெக்டர் தொடங்கி அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமி வரைக்கும் புகார் பண்ணிட்டங்க. ஒரு பிரயோசனமில்லை!''

கோவை மாநகராட்சியின் 63வது வார்டில் அமையும் அப் பகுதியின் கவுன்சிலர் ஏ. ருக்மணி. இவரும் இவரது கணவரும் தி.மு.க.காரர்கள். ருக்மணியின் வீட்டுக்குச் சென்றால் ஆளில்லை என்பது தவிர, பலமுறை தொலைபேசியில் தொடர்பு கொள்ள முயன்ற போதும் எடுப்பாரில்லாமல் கதறிக் கொண்டேதான் இருந்தது தொலைபேசி.

## தில்லை நகரா? தொல்லை நகரா?

"**சா**ர், நீங்க குடியிருப்புப் பகுதில சாக்கடைகள் பார்த்திருப்பீங்க. சாக்கடைல இருக்கற குடியிருப்புகளைப் பார்க்கணுமா?'' என்று கேட்ட அந்த நண்பர் விகவின் ஒன்று விட்ட உறவினராயிருக்க வேண்டும். ஆனால் அவர் ஜோக்கடிக்கிற ரகமல்ல.

"வந்து காட்டுங்க சார்'' என்ற போது, ''தொழிலுக்கு டைம் ஆச்சுங்க.'' (கடைகளுக்கு பன், பொறை போடுபவர்) என்று சொல்லிவிட்டு நமது ஆட்டோ டிரைவர் ராஜுவிடம் விரிவாக வழியை விளக்கி அனுப்பி வைத்தார்.

கேகே புதூரிலிருந்து கொஞ்ச தூரந்தான் அந்தத் தில்லை நகர். வீரப்பன் காட்டுக்குப் போன அதிரடிப் படை போல அத்தனை கவனமாகப் போக வேண்டியிருந்தது. காரணம் அந்தப் பாதை. ஒரு மேட்டில் மேலுலகைக் காட்டி உடனே பாதாள உலகுக்கும் ஒரு பயணம் செய்து, பக்கவாட்டில் தடதடத்து பின்புறம் கரகரத்து, விதியை நொந்தபடி சென்றது ஆட்டோ.

"இதுக்கு மேல முடியாதுங்க. இறங்கிக்கங்க.''

வேறு வழி?

இறங்கிய இடத்தில் தென்பட்ட பெட்டிக் கடையில், "யாருங்க உங்க கவுன்சிலர்?'' என்றபோது கிடைத்த பதில், நிச்சயம் நகைச்சுவைக்காக சேர்க்கப்பட்டதல்ல.

கொட்டை எழுத்தில் சொன்னார் கடைக்காரர் : "தெரியாதுங்க!''

"இது எத்தனாவது வார்டு?''

"அறுவதோ அறுவத்தஞ்சோ...''

அந்தக் கடைக்கு எதிரே கட்டட வேலையில் இருந்த ரவி என்பவரை அணுகிக் கேட்டோம்; "யாருங்க இந்த வார்டு கவுன்சிலர்?''.

"தெரியலீங்க.''

"வோட்டுப் போட்டீங்கல்ல?''




• சிங்கைபாலன்

ரொம்பத் தவிச்சுட்டோம். லைட்டும் கிடையாது; ரோடும் கிடையாது. நரக அவஸ்தை தினம் தினம் பட்டுட்டுத் தான் இருக்கோம்!" என்றார் மரகதம்.

"கவுன்சிலரையும் சேர்மனையும் குறைசொல்லிப் புண்ணியமில்லீங்க.



• சிங்காநல்லூர்: பஸ் ஸ்டாண்டுக்காகத் தவமிருக்கும் பில்லர்கள்

"ஆமுங்க."

"கவுன்சிலர் பேரு தெரியாமலா போட்டீங்க?"

வெட்கப்பட்டுக் கொண்டு நகர்ந்தாலும், "நீங்க ப்ரெஸ் காரருங்களா? அந்தப் பக்கம் போயிப் பாருங்க" என்று ஒரு திசையைச் சுட்டிக்காட்டினார்.

அங்கே, நமக்கு அந்த அதிர்ச்சி காத்திருந்தது!

சொதசொதவென்று பத்தடி அகலத்துக்கும் சுமார் நூறடி நீளத்துக்கும் விரிந்து கிடந்த சாக்கடை. மொய்க்கும் கொசுப் பண்ணை. கால் வைத்து நடக்க இடமின்றிக் கரகாட்டம் ஆடிக் குடிநீர் கொண்டு வரும் பெண்கள். சிறுவாணிக்கும் சாக்கடைக்கும் பிறந்ததிலிருந்தே வித்தியாசம் தெரியாமல் 'நதி'யில் விளையாடி, கொடியில் தலைசீவும் குழந்தைகள்....

"என்னங்க இது?" என்றோம் அதிர்ந்து.

"ஒரொரு இடத்துல மழை பெஞ்சா ரோடு சாக்கடையாகும். இங்க மழை பெஞ்சாதாங்க சாக்கடை கொஞ்சமாவது நகரும்" என்றனர் வருத்தமாக.

"இந்த வார்டு கவுன்சிலர் பேரு வீரகோபாலுங்க. அவருகிட்ட சொல்லிச் சொல்லி ஒரு புண்ணியமுமில்லை. இந்தா வருது நாப்பது லோடு மண்ணு; சாக்கடை இருந்த இடம் தெரியாது பாருன்னு சொல்லீட்டுப் போனவருதான். அவரும் வரலை; மண்ணும் வரலை'' என்றார் சாமிவேல் என்கிற பகுதிவாசி.

"நேத்திக்கி எம்மாமனாருக்கு ரொம்ப உடம்பு சரியில்லாம போச்சிங்க. நைட்டு தூக்கிப் போட்டுக்கிட்டு கிளம்பினப்ப, எப்பிடி தெருவத் தாண்டறதுன்னு புரியாம இங்க மக்களுக்கு ஒத்துமை இல்லை. ஒரே குரலா பேசறதுன்றது கிடையாது. அவஅவ வீட்டு வாசல் சரியா இருக்கற வரை யாரும் பொது விசயத்தும்பக்கம் எட்டிப் பாக்க மாட்டாங்க. அதான் மொத்தமா படுறோம்" என்று குமுறினார் மல்லிகா.

தில்லைநகர் வாசிகள் ஒட்டுமொத்தமாகச் சொன்ன விஷயம் – "கவுன்சிலரைத் தேர்தலன்று பார்த்ததுடன் சரி."

"உங்க மாநகராட்சில கொசு ஒழிப்புக்குத் தீவிர நடவடிக்கை எடுத்திருக்காங்கன்னு கேள்விப்பட்டமே? சாக்கடையைத்தான் மூடலை சரி; கொசு மருந்தாச்சும் அடிக்கறாங்களா?" – கேட்டதுதான் தாமதம்.

"நீங்க எதுல வந்திங்க?"

"ஏன், ஆட்டோவுல?"

"உம்! ஆட்டோவையே அரை பர்லாங் தள்ளி நிறுத்திட்டு வந்திருக்கிங்களே. கொசு மருந்து லாரி இங்க வந்துடுமாக்கும்!"

நக்கலாகச் சொன்னாலும் நியாயம் இல்லாமலில்லை!

## ஆர்.எஸ்.புரம் : சமூகவிரோதிகள் சரணாலயம்?

**கோ**வையில் ஆர்.எஸ். புரம் என்பது சற்று வசதியானவர்கள் வாழும் பகுதி. பராமரிப்புப் பிரச்னைகள் அதிகமில்லாத இப்

பகுதியிலிருந்து கிருஷ்ணமூர்த்தி என்கிற வாசகர் நமக்கொரு கடிதம் எழுதியிருந்தார்.

"சுமார் ஒண்ணே முக்கால் ஏக்கர் நிலத்தை சமூக விரோதிகளுக்குத் தாரை வார்த்திருக்கிறது மாநகராட்சி. வந்து பாருங்கள்!" என்பது அக் கடிதத்தின் சாரம்.

கேப்டன் பழனிச்சாமி லே-அவுட் என்கிற அவ்விடத்துக்குச் சென்றபோதே வசிப்பவர்களின் வாழ்க்கைத்தரம் விளங்கியது. மிகவும் நவீனமாகக் காட்சியளித்த அப்பிரதேசத்தில் சாலைகள் பாலால் மெழுகியது போல அத்தனை சுத்தம். ஒளிவிளக்குகள் அலங்காரம் மட்டுமல்ல; அவசியமுங் கூட. படு துப்புரவாகக் காட்சியளித்த இடத்தில் அந்த 'ஒண்ணே முக்கால் கிரவுண்ட்' மட்டும் வினோதமாக இருந்தது.

புதர் மண்டிய, மேட்டுப்பாங்கான இடத்துக்கு சிவிச் சிங்காரித்தது போல ஒரு காம்பவுண்ட் சுவர். சமூக விரோதிகள் கோட்டை கட்டி வாழ்வதென்பது இது தானா?

"உள்ளாட்சித் தேர்தலுக்கு முன்னால இங்க இருந்த கமிஷனர் நிரஞ்சன் மார்டி உண்மையிலேயே மக்கள் நலன்ல ரொம்ப அக்கறை உள்ளவர் சார். 'குழந்தைகள் பார்க் கட்டறதுக்கான இடம்'னு சொன்னாங்க; ஆனா குப்பை வாரி வந்து கொட்டிட்டுப் போவுது. செத்துப் போன நாய், பூனைங்களை இங்க தூக்கிப் போட்டுடறாங்க. ராத்திரி நேரத்துல 'வேறவிதமான அவஸ்தை'ன்னு அவர்கிட்ட புகார் செய்தோம். உடனே நடவடிக்கை எடுக்கறதா சொல்லி, அவர்தான் முதல் காரியமா அந்த இடத்துக்குக் காம்பவுண்ட் சுவர் கட்டினார். மேற்கொண்டு அவர் செயல்படறதுக்குள்ள அவரை டிரான்ஸ்ஃபர் பண்ணிட்டாங்க. இப்ப நிலைமை ரொம்ப மோசம். யார் யாரோ சுவர் ஏறிக் குதிச்சி உள்ளே போறாங்க. என்ன நடக்குதுன்னே தெரியலை. திடீர் திடீர்னு எதையெதையோ எரிக்கறாங்க. கெட்டநாத்தம் குடலைப் புரட்டுது. கமிஷனர் உட்பட எல்லார்கிட்டேயும் புகார் பண்ணிட்டோம். பார்க் கட்டவோ, வேறெதுவும் செய்யவோ மாநகராட்சில இப்ப நிதி கிடையாதுன்னு சொல்லிட்டாங்க. அமைதியான மக்கள் வாழற பகுதி இது. இந்த இடம் மட்டும் எத்தனை பிரச்னை குடுக்குதுன்னு சொல்ல முடியாது. ரொம்ப சுகாதாரக்கேடான பகுதியா இது மாறிட்டு வருது இப்ப!" என்றனர் பகுதிவாசிகள்.

இந்தப் பகுதியின் கவுன்சிலரான ரேவதியும் (த.மா.கா.) நமக்கு அகப்படவேயில்லை, நாம் கோவையிலிருந்த மூன்று நாட்களிலும்.

## புலியகுளம் : தண்ணிக்கொரு வழி சொல்லு

புலியகுளம் சாலை. நடுத்தர மக்கள் வசிக்கும் இப் பகுதியின் பிரதான பிரச்னை - தண்ணீர் சரியாக வருவதில்லையென்பதும் வருகிற தண்ணீரும் ஒழுங்காகப் பெற முடியாமல் பைப்புகள் உடைந்து கிடப்பதும்.

"நிரஞ்சன் மார்டி என்னிக்கி இந்த ஊரை விட்டுப் போனாரோ, அன்னிக்கி ஆரம்பிச்சிதுங்க எல்லாப் பிரச்னையும். இப்ப உள்ளாட்சி நிர்வாகத்துல இருக்கற யாராவது ஒருத்தர், ஒரு தடவையானா மக்கள்கிட்ட வந்து பேசியிருக்காங்களா கேளுங்க? அவங்கவங்க சம்பாதிச்சிக்கிறதுல தான் குறியா இருக்காங்க. மக்களுக்காகக் குரல் கொடுக்கறவங்கன்னு ஒரு கவுன்சிலரைப் பத்தி (ஹேமா ஜெயசீலன்) பெரிசா பேசினாங்க. அவங்களை த.மா.கா.லேருந்து விலக்கினதும் பெரிய பரபரப்பெல்லாம் ஆச்சு. ஆனா நெட் ரிஸல்ட் என்ன? அவங்க மேலயும் ஏராள ஊழல் குற்றச்சாட்டுகள் இருக்கறதா சொல்றாங்க. (இது தொடர்பாகப் பேச ஹேமா ஜெயசீலனுக்கு போன் செய்ய, அவர் வெளியூர் சென்றிருப்பதாகச் சொன்னார்கள் அவர் வீட்டில்!)

"போன வாரம் நீங்க கோவைக்கு வரப்

---



"கல்யாணமான புதுசில என் கணவர் என்னைப் பத்மாசனிங்கறதுக்கு பதிலா, 'பத்மா'ன்னு முதல் மூணு எழுத்தை மட்டும் வைச்சுக் கூப்பிடுவாரு."

"இப்போ?"

"கடைசி ரெண்டு எழுத்துக்களை மட்டும் வைச்சு செல்லமா கூப்பிடறாரே!"

– டி.என். பாலகிருஷ்ணன்

# நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம்

ஆம்! அதிர்ஷ்டமான பெயர் அமைத்தால் நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம். பணம், பதவி, புகழ், யாவும் கிட்டும் வெற்றிமேல் வெற்றிகளைக் குவிப்பீர்கள். இவ்வுலகில் அனுபவிக்கத்தக்க அனைத்து சுகபோகங்களையும் அனுபவிக்கலாம் என்று ஆணித்தரமாக அடித்துக் கூறுகிறார் கோவை மாவட்டம் அன்னூர், பு.புளியம்பட்டி அருகில் உள்ள கணுவக்கரையில் வசிக்கும் ஜோதிட விஞ்ஞானி கே.ஆர். பிரபாகர்ராஜ் அவர்கள். இவரது கருத்துக்கள் பின்வருமாறு:-



ஒரு மனிதனின் வெற்றிக்கும் தோல்விக்கும் மூலகாரணமாக இருப்பது பெயரும் கையெழுத்துமே ஆகும். ஒருவருடைய பெயரை முழுவதுமாக மாற்றத் தேவை இல்லை. சிறு திருத்தம் மட்டும் செய்தால் போதும் அதிர்ஷ்டப் பெயரால் மனித வாழ்வில் ஏற்படும் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் மிக நல்ல முறையில் தீர்வுகாண முடியும்.

அதிர்ஷ்டப் பெயர் அமைக்க நியூமராலஜி, நேமாலஜி, சைன் தொழில் வசியம் சிக்னேச்சராலஜி பெயர் வசியம், ஆர்க்கோலஜி, கிராபாலஜி, ப்யூசராலஜி போன்ற 9 வகையான காரணிகளையும் 12 வகையான இயக்கங்களையும் ஆதாரமாக வைத்து பெயர் சூட்டினால் பிரபலம் உண்டாகும். இது பூரணமாக விஞ்ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட சாஸ்திரமாகும். அதிர்ஷ்டப் பெயர் எண் சாஸ்திரப்படி முறையாகப் பெயரை மாற்றினால் உடனே அதிர்ஷ்டம் உண்டாகும்.

அதிர்ஷ்டப் பெயரை அமைத்துக் கொண்டால் அன்பான மனைவி (நல்ல கணவர்) அறிவுள்ள குழந்தைகள் வசதிமிக்க வீடு, வளமான தொழில், குறைவில்லாச் செல்வம் ஆரோக்கியமான உடல், இன்பகரமான வாழ்வு அனைத்து அதிர்ஷ்டங்களையும் அள்ளித் தரும். தொழில் முடக்கம் வியாபார மந்தம் உத்தியோகத்தில் இடையூறு, கணவன் மனைவியர்க்கிடையே ஒற்றுமை இல்லாமை, செக்ஸ் கோளாறு, மனக்குழப்பம், போதைப் பொருளுக்கு அடிமை ஆகுதல்.

செய்வினை மாந்தீரீக பாதிப்பு தீய சக்தியால் பாதிப்பு திருமணத்தடை குழந்தைபாக்கியம் இல்லாமை, முன்னேற்ற தடை, புகழ் இல்லாமை, மனநோய் போன்ற எண்ணற்ற வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கும் இக்கலையின் மூலம் நிரந்தரத் தீர்வுகாண முடியும்.

பெயர் மாற்றத்தால் பெருஞ்செல்வர் ஆகலாம். பெயரை எந்த வயதிலும் அதிர்ஷ்டமாக மாற்றி வெற்றிகளைப் பெறலாம். முறையாகப் பெயர் அமைத்தால் முன்னேற்றம் உண்டாகும். சிலர் கடைகளில் விற்கும் பல வகையான புத்தகங்களை வாங்கி தாங்களே பெயர் மாற்றி குழம்பி வாழ்வில் பெருந்துன்பத்தை அடைந்தவர்கள் ஏராளம். RAJINI KANT (ரஜினிகாந்த்) என்ற பெயரையோRAMBA (ரம்பா) என்ற பெயரையோ எல்லோரும் வைக்க முடியாது. இது பொருந்தி வருபவர்களுக்கு மட்டுமே வைக்க வேண்டும். அப்போதுதான் அதிர்ஷ்டம் தரும்.



VIJAY(விஜய்) என்ற பெயரையும் SIMRAN(சிம்ரன்) என்ற பெயரையும் ஆய்வு செய்தால் இதில் வசியம் இருக்கும். யாருக்கு எந்தப் பெயர் பொருந்தும் என்று நன்கு ஆய்வு செய்து பெயர் அமைத்தால் அதிர்ஷ்டம் உண்டாகும். செய்கின்ற தொழில் எதுவாக இருந்தாலும் அத் தொழிலில் வசியம் இருக்க வேண்டும். அப்படி தொழில் வசியம் இருந்தால்தான் தொழிலில் பெரும் பணம் சம்பாதிக்க முடியும்.

ஒரு மனிதனுக்கு விடாமுயற்சி, அயராத உழைப்பு, தர்ம குணம், தன்னம்பிக்கை போன்ற குணங்கள் இருந்தும் வாழ்வில் வெற்றி பெற முடியவில்லையெனில் அதிர்ஷ்டம் இல்லை என்பது நன்கு தெரிகிறது. இல்லாத அதிர்ஷ்டத்தை பெற இக்கலை வழிகாட்டும்.

ஜாதகம், கைரேகை, நாடி, வாஸ்து போன்ற ஜோதிடங்களை விட அதிர்ஷ்டப் பெயர் எண் ஜோதிடம் பல ஆயிரம் கோடி மடங்கு சக்தி வாய்ந்தது. என்னால் சவால்விட்டு நிரூபிக்க முடியும். இக்கலையின் மூலம் எம்மிடம் அதிர்ஷ்டப் பெயர் அமைத்தவர்கள் அனைவரும் இன்று வெற்றி பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். உடலின் காந்த சக்தி உயிர்ப்பு சக்திக்கு தக்கவாறு பெயரையும் கையெழுத்தையும் அமைத்தால் அபரிமிதமான அதிர்ஷ்டங்கள் கிட்டும்.

**உங்கள் வெற்றிக்கு வழிகாட்டும்**
**ஜோதிட மாமேதை கே.ஆர். பிரபாகர்ராஜ்**
**நியூமராலஜி–நேமாலஜி–சைன்–தொழில் வசியம்**



எம்.ஜி.ஆர்., சிவாஜி கணேசன், ரஜினி காந்த், பாக்கியராஜ், விஜய், சூர்யா, குஷ்பு, ரம்பா, சிம்ரன், ரோஜா, விஜயகாந்த் போன்ற சினிமா துறையினர்களும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும். பெயரில் வசியம் கோபுரம்சம் இருக்க வேண்டும்.

அரசியலில் வெற்றி, சினிமாவில் புகழ், விளையாட்டில் சாதனை, தொழிலில் மேன்மைகிட்டும். அந்த கால இராஜ ராஜ சோழன், அக்பர், புத்தர், மகாவீர், அசோகர், பொற்கை பாண்டியன், நெப்போலியன், பாரதியார், பாரதிதாசன், கண்ணதாசன், இந்திராகாந்தி, வீரமாமுனிவர், ஆதிசங்கர், காஞ்சி பெரியவர் போன்றோரும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும்.

அதிர்ஷ்டப் பெயர் சாதாரண மனிதனையும் பெரிய சாதனையாளராக ஆக்கக் கூடியது. கையெழுத்தால் தலை எழுத்தை வெல்லலாம்.

ஆண்-பெண் எந்த தேதியில் பிறந்தவராக இருந்தாலும் அவர்கள் திருமணம் செய்த நாளின் கூட்டு எண், திருமணத் தேதி, மாதம், வருடம் மூன்றையும் கூட்டி வரும் எண் 2,4,5,7,8 வரும் நாளில் கண்டிப்பாக திருமணம் செய்யக் கூடாது. அப்படி செய்தால் சோதனைகளும், போராட்டங்களும் நடக்கும். இதிலிருந்து விடுபட மறு மாங்கல்ய பூஜை அதிர்ஷ்ட நாளில் செய்து கொண்டால் குடும்ப வாழ்க்கை சந்தோஷமுடனும், வெற்றியுடனும் இருக்கும்.

அதிர்ஷ்டப் பெயர், எண் சாஸ்திரம் எக்காலத்திலும் மாறாத சக்தி கொண்டது. பெயரையும் இடும் கையெழுத்தையும் வளமாக்கிக் கொண்டால் என்றென்றும் வெற்றிகள்தான். இக்கலையின் மூலம் நான் சவால்விட்டு நிரூபித்துக் காட்டிய அறிவியல் விஞ்ஞான சாஸ்திரமாகும்.

அதிர்ஷ்டப் பெயர் எண் சாஸ்திரப்படி பெயர் அமைத்தால் பதவி புகழ் உண்டாகும். வெற்றிகள் பல குவியும். நீங்களும் மிகப்பெரிய கோடீஸ்வரர் ஆகலாம்.

இவரது ''அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திரம்'' என்னும் புத்தகத்தை வாங்கிப் படித்து பயன் பெறுங்கள்.





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர், (வழி) தாம்பரம், சென்னை–63.
Tel & FAX: 2376129,E.mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com
Please visit our WEBSITE AT: www.intamm.com/sspeetam

## ஒரிசா மாநில புயல் நிவாரணப் பணி அவசர வேண்டுகோள்

அன்புள்ளம் கொண்டோரே,

கடந்த சில நாட்களாக, ஒரிசா மாநில பகுதியில் வீசிய கடும் புயல் காரணமாக, லட்சக்கணக்கான பேர் வீடுகள் இழந்து தங்கள் அன்றாட வாழ்க்கையே கேள்விக்குறியாக உள்ள இந்த நேரத்தில்,

மத்திய, ஒரிசா மாநில அரசு தனியார் தொண்டு நிறுவனங்களை சேவை செய்யுமாறு அழைத்துள்ளது. அதன்படி நம் "ஸ்ரீ சாரதா சக்தி பீடத்தின்" நிறுவனர், சுவாமிஜியும் தொண்டர்களும், பாதிக்கப்பட்ட பகுதிகளுக்குச் சென்று, பார்வையிட்டு, நிவாரணப் பணிகளை மேற்கொள்வதற்கு, முடிவு செய்யப்பட்டுள்ளது.

அதன்படி கட்டாக் நகரத்தில், முகாம் ஒன்றை அமைத்து, நிவாரணப்பணி ஜகசிங்பூர் மாவட்டத்தில் நடைபெற்று வருகிறது.

முதற்கட்டமாக 15,000 குடும்பங்களுக்கு உடனடித் தேவைகளான அத்தியாவசியப் பொருட்களை வழங்க திட்டமிடப்பட்டுள்ளது. இதுவரை ரூ 3,00,000 மதிப்புள்ள புதிய துணிகள் சேகரித்து பாதிக்கப்பட்ட மக்களுக்கு நேரிடையாக வழங்கப்பட்டுள்ளது.

ஒரு குடும்பத்திற்கு 25 கிலோ அரிசி, இரண்டு போர்வைகள் வேஷ்டி, சேலை, லாந்தர்விளக்கு ஆகியவற்றை வழங்க ரூபாய் 500/- செலவாகிறது.

மொத்தம் 15,000 குடும்பங்களுக்கு ரூ 75,00,000/- (எழுபத்தி ஐந்து லட்சம்) தேவைப்படுகிறது. கருணை உள்ளம் படைத்த இதயங்களை நாடுகின்றோம்.
குறிப்பு : நன்கொடை செக்/டிடி/மணியார்டர்கள் "ஸ்ரீசாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு அனுப்பவும்.

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

## கிறிஸ்துமஸ் / புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (137 பேருக்கு) | ரூ | 750/- |
| • மதிய உணவு (இனிப்புடன்) | ரூ | 1,500/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ | 1,000/- |
| • பிஸ்கட் மற்றும் பால் வழங்குதல் | ரூ | 500/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ | 3,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ | 6,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ | 1,50,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக் கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/ DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின் படி வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்
மேனேஜிங் டிரஸ்டி.

போறதா அறிவிப்புப் போட்டீங்க இல்லை? அதைப் பார்த்துட்டு அவசர அவசரமா சில ரோடுகளை சரிசெய்தாங்க. வீதிக்கு திடீர்னு குப்பை வாரி வந்தது. சாக்கடைகளை க்ளீன் பண்ண ஆரம்பிச்சாங்க. பொறந்ததுடா விடிவு காலம்னு நிம்மதிப் பெருமூச்சு விட்டோம். ஆனா, எல்லாம் ரெண்டு நாளோட சரி. மறுபடியும் குப்பை சேர ஆரம்பிச்சாச்சு!''

– பொறிந்து தள்ளி விட்டார் புலியகுளம்வாசியான துரையன்.

சாலையில் உடைந்து கிடந்த சிறுவாணி நீர் பைப்புகளை அழைத்துச் சென்று காட்டியவர், அதே பகுதியிலுள்ள வேறொரு குடியிருப்புக்கும் அழைத்துச் சென்று ஒரு குழாயைக் காட்டினார்.

''இந்த பைப்புக்கு அதிகாரபூர்வமா அனுமதி கொடுத்துத்தான் போட்டாங்க. குழாய் (Tap) நீங்களே வாங்கிடுங்கன்னாங்க. சரின்னு வாங்கினோம். ஆனா, 'நாங்க வந்து மாட்டித் தரோம். நீங்க மாட்டாதீங்க. பைப் லைன் வர்ற வழில உடைசல் இருக்கு. இசகுபிசகா மாட்டினீங்கன்னா தண்ணி வரத்துப் பிரச்னை ஆவறதோட நீங்களும் ஜெயிலுக்குப் போக வேண்டி வரும்'னு மிரட்டிட்டுப் போனாங்க. அது ஆச்சு ஒரு வருசம். மறுபடி ஒருத்தர் வரலை இந்தப் பக்கம். ராவோ, பகலோ – தண்ணி எப்ப வரும்னு சொல்ல முடியாது. கவனிக்கலைன்னா ரோடெல்லாம் வெள்ளமா போயிட்டே இருக்கும். கவுன்சிலர் தேவராஜுக்கு (வார்டு 21) விஷயம் தெரியும். இருந்தாலும் ஒரு நடவடிக்கை கிடையாது!'' என்றனர், கூடி விட்ட பெண்கள்.

## சிங்காநல்லூர் : வருமா பஸ் ஸ்டாண்ட்?

''உங்கள் ஊரில் ஒரு அசோக்பில்லர்தானே இருக்கிறது? இங்கே நாற்பது பில்லர்கள் தவமிருக்கின்றன. வந்து பாருங்கள்!'' என்று கூப்பிட்டார் சிங்காநல்லூர்க்காரர் ஒருவர்.

போனோம்.

சிங்காநல்லூர் பகுதியைச் சேர்ந்த உப்பிலிப்பாளையம் என்கிற கிராமத்தில் ஒரு பெரிய ப்ளே கிரவுண்டின் நடுவில் நாற்பது பில்லர்களுக்கு அடித்தளமிட்டு பனை மர உயரத்துக்குக் கம்பிகள் செருகியிருந்தார்கள்!

என்ன இது? என்று விசாரித்தால், ''மொபசல் பஸ் ஸ்டாண்ட் வரப் போறதா சொல்லி பில்லர் வேலை ஆரமிச்சாங்க. அது அப்படியே கிடக்குது பல வருஷமா!'' என்றனர் மக்கள்.

சிங்கை பாலன் (அதிமுக. – மேயருக்குப் போட்டியிட்டுத் தோற்றவர்) நம்மிடம் பேசும் போது, ''இங்க பஸ் ஸ்டாண்ட் வரவேண்டியதோட முக்கியத்துவத்தை யாருமே மறுக்க முடியாதுங்க. நகருக்குள்ள டவுன் பஸ் ஸ்டாண்ட் இருக்குது. ஆனா வெளியூர் பஸ்கள் வந்து போக சரியான ஏற்பாடு கிடையாது. போக்குவரத்து நெரிசலைத் தீர்க்கத்தான் இங்க பஸ் ஸ்டாண்ட் கட்ட அம்பது லட்சம் எஸ்டிமேட் போட்டாங்க. ஆனா என்ன ஆச்சு?


''ஆனாலும் அந்த டாக்டருக்கு இவ்ளோ பேராசை கூடாது.''
''என்ன விஷயம்?''
''ரிஸப்ஷன்ல 'உங்களின் நோயுற்ற வாழ்வே எங்களின் குறைவற்ற செல்வம்'னு எழுதி வெச்சிருக்காரு.''
– அதிரை யூசுப்

நிலத்துக்குச் சரியா எல்லை வகுக்காம, அவசர அவசரமா வேலை ஆரம்பிச்சதுல பல முறைகேடுகள்! இங்க சுத்தியிருக்கற வீடுகளெல்லாம் முப்பது வருஷ பட்டா நிலத்துல கட்டப்பட்டவை. அவுங்களைப் போயி காலி பண்ணுங்கன்னா என்ன பண்ணுவாங்க? கோர்ட்டுக்குப் போயி, ஸ்டே வாங்கிட்டாங்க!

''சாதாரணமா, மாநகராட்சிக்குட்பட்ட ஒரு பணி தொடங்கறதுன்னா, திட்டம் பத்து லட்சத்தைத் தாண்டறதுன்னா, அரசு அனுமதி வாங்கணும். டவுன் பிளானிங் கமிட்டி அப்ருவல் வாங்கணும். பல சடங்குகள் இருக்கு. எதையுமே செய்யாம திடீர்னு வேலை ஆரம்பிச்சாச்சி! நாப்பது பில்லர் போட்டதுக்கே முப்பது லட்சம் செலவாயிட்டதாச் சொல்றாங்க. அகவுண்ட்ஸ் ஆபீஸ்ல கேட்டா சரியான புள்ளி விவரம் தர்றதில்லை. வருஷக்கணக்கா பில்லருங்க

காத்துலயும் மழை – வெளியிலயும் சும்மா நின்னா என்னாவும்னு உங்களுக்கே தெரியும். ஆன செலவும் வேஸ்ட். செயல்படாத மேயரை வெச்சிக்கிட்டு ரொம்ப அவஸ்தைங்க. ஏண்டா வோட்டுப் போட்டம்னு ஜனங்க இப்ப வருத்தப்படறாங்க!'' என்றார்.

எதிர்க்கட்சிக்காரர் கூறுகிற குற்றச்சாட்டை மட்டும் எப்படி கணக்கில் எடுத்துக் கொள்வது என்று சில உள்ளூர்வாசிகளிடமும் பேசியதில், பில்லர் இறக்கச் செலவான பணம் அவ்வளவுதான்; இனி பஸ் ஸ்டாண்ட் வருவதாயிருந்தாலும் வேறு பில்லர்கள்தான் போட வேண்டும் என்று தெரிவித்தார்கள்.

## படகு ஓட எத்தனை லட்சம்?

இன்னும் பல இடங்களில் சாக்கடைகள் பிரச்னை, சாலைப் பிரச்னை (நகரின் பிரதான பகுதிகள் தவிர வேறெங்கும் சாலைகள் வாகனம் செல்லும் விதமாக இல்லை!) ஒரு சுடுகாடு இல்லாமல் நாலைந்து கிலோ மீட்டர் நடந்து செல்ல வேண்டிய சாயிபாபா காலனிவாசிகளின் அவலம், ஒரு மாநகராட்சித் திருமண மண்டபம் கூடச் சரியாகப் பராமரிக்கப்படாத அக்கிரமம், மாநகராட்சிப் பள்ளிகளெல்லாம் வணிக வளாகங்களாக மாறிக் கொண்டிருக்கும் 'மந்திர ஜாலம்' (இதுகுறித்து ஏற்கெனவே எழுதியிருக்கிறோம்!) வழியெங்கும் மாநகராட்சி தனியார்வசம் குத்தகை விட்டிருக்கும் சைக்கிள் ஸ்டாண்டுகளில் அநியாய வசூல் (இரண்டு ரூபாய் கட்டணத்துக்குப் பதில் ரூ3 வசூலிக்கிறார்கள்) என்று ரிலே ரேஸ் மாதிரி மக்கள் நமக்கு ஒவ்வொன்றாகச் சுட்டிக்காட்டிக் கொண்டே வந்தார்கள். பார்த்தபடியே படகுத் துறைக்கு வந்து சேர்ந்தோம்.

''கோவை மக்களின் ஒரே பொழுது போக்கு இடம் என்று மேயர் வருணித்த படகுத் துறையில் இரண்டு ஆள் ஆழத்துக்கு ஊழல் இருக்கிறது'' என்று சிங்கைபாலன் வருணித்தது நினைவுக்கு வந்து, இறங்கினோம்.

''தண்ணியப் பாத்தீங்களா? சும்மா பளபளன்னு ஜொலிக்கலை? நேத்தைக்கு முன் தினம் வந்து பார்த்திருக்கணும். தண்ணியே தெரியாத அளவு ஆகாயத் தாமரை நிறைஞ்சிருக்கும் – எப்பவும். இதுல படகு எப்பவும் போக முடியாதுங்க. ஆனா இதைச் சரிசெய்ய மட்டும் நாப்பத்தெட்டு லட்சம் நிதி ஒதுக்கி, செயல்பட்டதா சொல்றாரு மேயர். ஆகாயத் தாமரையை அகற்ற மட்டுமே நாப்பதுக்குக் குறையாம செலவு புடிக்குதுங்கறாங்க அதிகாரிங்க. உண்மையில இவங்க வெளில சொன்ன நாப்பத்தெட்டு போக இன்னொரு நாப்பது செலவாயிருப்பதை நைஸா மறைச்சிட்டாங்க'' என்றனர் அந்தப் பகுதி மக்கள்.

படகுத் துறையில் பணியிலிருந்த மணி என்கிற மாநகராட்சி ஊழியரை (ரெக்கார்ட் கிளார்க்) அணுகினோம். ''ஏங்க இந்தப் படகுத் துறையை மாநகராட்சி தனியாருக்குக் குத்தகை விடப் போறதாகவும் அதுக்காகத்தான் இப்ப அவசர அவசரமா க்ளீன் பண்ணியிருக்கறதாகவும் சொல்றாங்க?''

''அதெல்லாம் பொய்யுங்க. இப்ப யாரும் க்ளீனிங் வேலை எடுத்துக்கலைங்க. காத்தடிச்சதுல, ஆகாயத் தாமரைங்க தானா விலகி ஓடிப் போயிருச்சிங்க. அந்தா பாருங்க!'' என்று சுட்டிக்காட்டினார். தூரத்தில் ஒரு பெரிய 'குடும்பமே' பிரேட் நடத்திக் கொண்டிருந்தது.

''இந்த ஏரில தண்ணியே கிடையாது. சாக்கடை நீரும் மழை நீரும்தான் படகு விட ஆதாரம்ங்கறாங்க?''

''மழை சென்றாங்க ஆதாரம். சாக்கடைத் தண்ணி வர ஒரு வழிதான் இருக்குது. இந்தச் செடிங்களை எடுத்துட்டாலே தண்ணி நிக்கும். ஒவ்வொரு செடியும் ஒரு நாளைக்கு ரெண்டு லிட்டர் தண்ணி குடிச்சிடும். பாருங்க, லட்சக்கணக்கான ஆகாயத் தாமரைச் செடிகள்! இதை பர்மனன்டா நீக்கினாலே படகுச் சவாரி ஜோரா நடத்தலாங்க!'' என்றவர் நம்மைப் படகில் ஏற்றி ஆகாயத் தாமரைச் செடிகள் நகர்ந்து போன பக்கத்துக்கு அழைத்துச் சென்று காட்டினார். நீரில் மிதக்கும் இந்த ராட்சஸ நீர்



**''தலைவரு வேக வேகமாக ஊழல் பண்றாரே என்ன விஷயம்?''**

**''அவருக்கு ஆயுள் பாவம் சரியில்லைன்னு ஜோசியர் சொல்லிட்டாராம்!''**

**– ஜி. ராமமூர்த்தி.**

குடிக்கும் செடிகள் கோவை படகுத் துறையை ஒரு விளையாட்டு மைதானமாக மாற்றுவதில் வருஷக்கணக்காக மும்முரமாகச் செயல்பட்டு வருபவை!

"நல்ல குடிநீர் வசதி இருக்குதுங்க. படகுத் துறை இப்ப செயல்பட ஆரம்பிச்சாச்சின்னு மக்களுக்குத் தெரிய பேப்பர்ல விளம்பரம் குடுக்கப் போறாங்க. ஏரியைச் சுத்தி வாக்கிங் போக வசதியா பாதை போடப் போறதாகவும் திட்டம் வெச்சிருக்காரு மேயர்" என்றார் மணி.

"அங்க உலா போகப் பாதை போடறது கிடக்கட்டுங்க. எங்க ரோடுங்களை முதல்ல சரிசெய்யச் சொல்லுங்க!" என்று கோரஸாகக் குரல் கொடுத்தனர் கோவை வாசிகள்.

## 'தந்தை'யைத் தேடி....

தொலைபேசியில் தொடர்பு கொண்ட போதும் சரி; நேரில் சென்ற போதும் சரி. ஓரிருவரைத் தவிர எந்த கவுன்சிலரையும் பிடிக்கவே முடியவில்லை! கவுன்சிலர்களே இப்படியென்றால் சேர்மன்கள்? கேட்கவே வேண்டாம்.

"சாயிபாபா காலனி கவுன்சிலர் வெங்கடாசலமும் (காங்) கோவை தெற்கு மண்டல சேர்மன் நாச்சிமுத்துவும் (திமுக) தாங்க மக்கள் மேல அக்கறையோட செயல்படறவங்க. தொகுதிக்குள்ள சுலபமா பார்க்கக் கூடியவங்களும் அவங்கதான். ஆனால் ஓர் எல்லைக்குமேல அவங்களாலயும் ஏதும் செய்துட முடியாது பாருங்க! சட்டில இருந்தாத்தானே அகப்பைல வரும்?" என்றனர் கோவை வாசிகள்.

மாநகராட்சி கமிஷனரைச் சந்திக்க முயன்றபோது, "அவருக்கு ரொம்ப உடம்பு சரியில்லைங்க. இப்ப பேசறதே கஷ்டம்" என்றுவிட்டார்கள்.

துணை மேயர் வேலுச்சாமியின் வீட்டுக்கும் அலுவலகத்துக்கும் போன் செய்து செய்து பார்த்து விரல் தேய்ந்தது தான் மிச்சம்.

சரி, வேறு வழியில்லை என்று மாநகரத் தந்தைக்கே போன் செய்தால் அப்போது தான் சென்னை சென்று திரும்பியிருந்தவர், அகப்படுவேனா என்றார்.

சரி, போனில்தான் அகப்படவில்லை. மக்கள் தம் குறையை மேயருக்கு நேரடியாகத் தெரிவிக்க வசதியாக ஒரு 'பேஜர்' கொடுத்திருந்தார்களே, அந்த நம்பராவது கிடைக்குமா என்று விசாரித்தால் அன்று காலைதான் அந்த மங்களகரமான காரியம் அம்பலத்துக்கு வந்திருந்தது.

மேயரின் பேஜர் யாரோ ஓர் ஆசாமிக்கு ரூ. ஐயாயிரத்துக்கு அடகு வைக்கப்பட்டிருக்கிறது!

தம் உதவியாளரிடம் பேஜரைக் கொடுத்து வைத்திருந்தார் மேயர் கோபால கிருஷ்ணன். அவருக்கு, 'இது எதற்கு தண்டத்துக்கு? மக்கள் குறையாவது, மண்ணாங்கட்டிக் குறையாவது?' என்று தோன்றவே, 'அவசரச் செலவுக்கு' அடமானம் வைத்து விட்டார். (நாம் கோவையிலிருந்து திரும்புகிற தினம் பேஜர் மீட்கப்பட்டு விட்ட செய்தி நாளிதழ்களிலேயே வந்து விட்டது– என்னவோ டைகர் சிகரத்தை மீட்டாற் போல!)

மேயரின் செலுலர் தொலை பேசியும் ரிப்பேராகி, பதிவு செய்யப்பட்ட தகவலே மீண்டும் மீண்டும் கேட்டதற்கு மேயர் எப்படிப் பொறுப்பாவார்? அது விதியின் பிழை. "இதெல்லாம் சரிப்படாதுங்க. நீங்க விடியறதுக்கு முன்னால எழுந்து மாநகராட்சி அலுவலகத்துக்குப் போயிடுங்க. கரெக்டா ஆறு மணி வாக்குல ஒரு விஸிட் அடிப்பாரு மேயர். அப்ப பிடிச்சிடலாம்!" என்று யோசனை தந்தார் கவுன்சிலர் வெங்கடாசலம்.

அவரது யோசனைப்படியே மறுநாள் அதிகாலை நேரத்தில் கோவை மாநகராட்சி அலுவலகத்துக்குச் சென்றோம். மேயர் அத்தனை சுலபத்தில் பேட்டி கொடுத்து விட்டாரா என்ன?

(மீதி அடுத்த வாரம்)

— **கிருஷ்ணன்**

படங்கள்: **வெங்கடேஷ்**



"நீங்கள் ஏன் விவாகரத்து கோருகிறீர்கள்?"

"ஆறுமாத காலமாய் என் மனைவி என்னுடன் பேசவில்லை."

"யோசித்துச் சொல்லுங்கள்! அம்மாதிரி மனைவி கிடைப்பது அரிது!"

— அருள் மூர்த்தி

மந்திரப் புன்னகை — 17

# மைக்கேல் ஜாக்ஸன் கற்றுக் கொள்ள விரும்பிய மேஜிக்!

யானையை மாயமாய் மறைய வைத்தால் என்ன? என்று என் மகனிடம் சொன்னபோது, 'நல்ல ஐடியா!' என்று கூறிப் பாராட்டினார்.

அடுத்த கட்டமாய், அந்த புதுமையான ஐடியாவுக்கு செயல் வடிவம் கொடுப்பதில் இறங்கினோம். யானையாக இருந்தால் என்ன? பூனையாக இருந்தால் என்ன? இரண்டிலுமே மாயமாக மறைய வைக்கும் சூட்சுமம் ஒன்றுதானே? ஆனாலும், இந்த ஐட்டத்தினை மேடையில் செய்து காட்டுவதில் எங்களுக்கு சிக்கல் இருந்தது. முதலாவதாக, யானை வந்து போகிற அளவுக்குப் பெரிய அளவில், ஸ்டிராங்கான மேடைகள் கொண்ட அரங்கங்கள் இங்கே அதிகமில்லை. இருக்கும் ஒரு சில அரங்கங்களிலும், யானையை மேடைக்குக் கொண்டு வருவதற்கேற்ற வசதிகள் இல்லை. அதாவது, மேடையின் பின்புறக் கதவுகள் யானை நுழையும் அளவுக்குப் பெரிதாக இல்லை. எனவே, யானையை மாயமாய் மறைய வைக்கிற மேஜிக்கை பல நாட்களுக்கு மேடையேற்றாமலேயே இருந்தோம். ஒருதடவை ஜப்பான் போயிருந்தபோது, அங்கே மேடையின் அளவு, நுழைவாயில் அளவு எல்லாம் பிரம்மாண்டமாக இருந்தன. அங்கே எங்களுடைய தேவையை அறிந்த ஒருவர், எங்களுக்கு மேஜிக் நிகழ்ச்சியின்போது பயன்படுத்திக் கொள்ள ஒரு யானை கொடுத்து உதவுவதற்கு முன் வந்தார்.

ஒத்திகைக்குப் பின் மேடை ஏறியது யானை. அரங்கத்தினுள்ளே, மேடை மீது யானையைப் பார்த்தவுடனேயே, ரசிகர்கள், குறிப்பாக குழந்தைகள் பரவசமடைந்தார்கள். மேடையில் நடுநாயகமாய் யானை நிற்கும். அதைச் சுற்றி நான்குபுறமும் யானை உயரத்துக்குத் தடுப்புப் போட்டு இருக்கும். பார்வையாளர்களுக்கு நேரே உள்ள தடுப்பு, கதவு போல் திறக்கப்படும். உள்ளே யானையைப் பார்க்கலாம். அதன் மீது ஜூனியர் ஏறி அமர்ந்து கொள்ளுவார். தடுப்பு மூடப்படும். யானை மீது அமர்ந்திருக்கும் ஜூனியர் மட்டும், ரசிகர்களுக்குத் தெரிவார். ஒன்று... இரண்டு... மூன்று! டமால் என்று வெடிச் சத்தம் பளீரென்று வெளிச்சம். தடுப்புக்கு மேலே தெரியும் ஜூனியர் மறைந்து விட்டிருப்பார். தடுப்பைத் திறந்து பார்த்தால், ஜூனியர் தரையில் விழுந்து இருப்பார்; யானை மாயமாகி விட்டிருக்கும். இந்த ஐட்டம், ஒரே நாளில் ஜப்பான் முழுக்க பிரபலமாகி விட்டது. அந்த அளவுக்கு பத்திரிகைகளும், டெலிவிஷனும் முக்கியத்துவம் கொடுத்தன.



• மைக்கேல் ஜாக்ஸன்

இன்னொரு சமயம், மேடையின் ஒரு

**மேஜிக் நிபுணர் கே. லால்**



## நாலாயிரம் விஷம்!

**தமிழக அரசு பொது இடங்களில் புகை பிடிப்பதைத் தடை செய்வது பற்றி ஆலோசிக்கிறது. அதில் நிக்கோடின் என்ற விஷம் இருப்பதாக மட்டும் பலர் கருதுகிறார்கள். உண்மையில் 4000 தீங்கு விளைவிக்கும் இரசாயனப் பொருள்கள் அதில் உள்ளன. அவற்றில் சில: அசிடோன்; அம்மோனியா; ஆர்சனிக்; புட்டேன்; கேட்மியம்; கார்பன் மானாக்சைட்; ஹைட்ரஜன் சயனைட்; டி.டி.டி; மீத்தேன்; டூலேன் இன்னும் பல.**

**– "டெக்கான் ஹெரால்ட்"**

**தகவல்: அ. ஷண்முகசுந்தரம்**

பகுதியில் உள்ள கூண்டிலிருந்து ஒரு புலியை மறைய வைத்து, இன்னொரு பகுதியில் உள்ள கூண்டினுள்ளே தோன்ற வைக்கிற மேஜிக்கைச் செய்து காட்டினோம். இதில் ஒரு ரகசியம் என்ன தெரியுமா? மறைகிற கூண்டுக்கு ஒரு புலி, மறுபடி தோன்றுகிற கூண்டுக்கு ஒரு புலி என்று, ஒரே மாதிரியான இரண்டு புலிகள் எனக்குத் தேவைப் பட்டன. காரணம், மறைகிற புலியையே, வேறு கூண்டினுள்ளே வரவழைப்பது சாத்தியமில்லாத ஒன்று. என் ஸ்பான்சரிடம் எனது தேவையைத் தெரிவித்த போது, உடனடியாக இரண்டு புலிகளை ஏற்பாடு செய்து கொடுத்து விட்டார். இதில் இன்னொரு முக்கியமான சுவாரசியம் இருக்கிறது. அது என்ன தெரியுமா? முதல் கூண்டினுள்ளே புலியுடன் ஜூனியரும் உள்ளே செல்லுவார். புலியும் ஜூனியரும் மறைவார்கள். மறுபடி தோன்றுகிறபோதும் ஜூனியரும், புலியும் இருப்பார்கள். இதுதான் ஸ்பெஷாலிடி.

குஜராத்தில் அகமதாபாத் நகரில் ஒரு தடவை, அரசாங்க அனுமதியுடன், மிருகக் காட்சி சாலையிலிருந்து மனிதக் குரங்கைப் பெற்று, அதனை, என் நிகழ்ச்சியில் பயன்படுத்திய அனுபவமும் எனக்கு உண்டு. ஆனால், மனிதக் குரங்கை, மறைய வைப்பது, மனிதனாக மாற்றுவது போன்ற ஐட்டங்களுக்கு நான் பயன்படுத்தவில்லை. மாறுதலுக்காக, என் நிகழ்ச்சியின் இடையில் நகைச்சுவைக்காக ஒரு குள்ள மனிதர் வரும் போது, அவர் கையைப் பிடித்து, மனிதக் குரங்கை அழைத்துக் கொண்டு வருவது போலப் பயன்படுத்திக் கொண்டேன். இந்த முயற்சிக்கு, வயது வித்தியாசம் இல்லாமல் அனைவரிடமிருந்தும் அமோக வரவேற்பு. ஒப்பந்தம் முடிந்து, ஊரை விட்டுப் புறப்படுகிறபோது, அந்த மனிதக் குரங்கிடமிருந்து பிரியாவிடை பெற்றுக் கொண்டோம் என்றால் துளியும் மிகையில்லை.

மனிதக் குரங்கிற்கு, மேடைப் பயிற்சி கொடுத்த அனுபவமும் மறக்க முடியாத ஒன்று. மற்ற எந்த மிருகத்தையும் விட மனிதக் குரங்கு புத்திசாலி என்பது உங்களுக்குத் தெரியும். சிறிது பயிற்சிக்குப் பின், நான் கை தட்டினால், அதுவும் கை தட்டும்! கையை அசைத்தால், அதுவும் கைகளை அசைக்கும். தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டால், அதுவும் தலையைத் தொங்கப் போட்டுக் கொள்ளும். பார்ப்பதற்கு ரொம்ப சுவாரசியமாக இருக்கும். மனிதக் குரங்கு, கை தட்டினால், அடுத்த நிமிடம், அரங்கமே கர ஒலியில் அதிரும் என்பது மட்டும் நிச்சயம்!

1983ல், எங்களது மேஜிக்ஷோ ஜப்பானில் நடந்துகொண்டிருந்த சமயம், உலகப் புகழ் பெற்ற பாப் பாடகர் மைக்கேல் ஜாக்சன், ஒருநாள் எங்கள் நிகழ்ச்சியைக் காண்பதற்கு வந்திருந்தார். நிகழ்ச்சியின் ஒவ்வொரு நிமிடத்தையும் ரசித்துப் பார்த்துக் கொண்டிருந்தவர், இடைவேளையின்போது, என்னை வந்து சந்தித்தார். "ஜப்பான் நாட்டில் அனைவரும் உங்களைப் பற்றி மிக உயர்வாகச் சொன்னார்கள். எனவே, எனக்கும் உங்கள் மேஜிக் ஷோவைப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டது. நானும் அமெரிக்காவில் பல மேஜிக் ஷோக்களைப் பார்த்திருக்கிறேன். ஆனால் உங்களைப் போல, சுறுசுறுப்பானவரைப் பார்த்ததில்லை;

மடமடவென்று, நீங்கள் அடுத்தடுத்து பல ஐட்டங்களையும் செய்துகொண்டே போவது, என்னை ஆச்சரியப்படுத்துகிறது!" என்றார் கை குலுக்கியபடி. எனக்கு சந்தோஷமாக இருந்தது.

அவர் தமது பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொண்டது மட்டுமல்லாமல், "உடை மாறும் மேஜிக்கின் ரகசியத்தை எனக்கு நீங்கள் சொல்லித் தர முடியுமா? என்று கேட்டார்.

அது என்ன உடை மாறும் மேஜிக்? ஜூனியரின் ஸ்பெஷாலிடியான அதில் மேடையில் மூன்று அழகிகள் வருவார்கள். அரைவட்ட வடிவில், ஒரு கம்பியிலிருந்து வெகு அடர்த்தியாக, நீளமான ரிப்பன்கள் தொங்கிக் கொண்டிருக்கும். அதைக் கொண்டு, ஓர் அழகியை, ஒரு சில வினாடிகளுக்கு ஜூனியர் மறைத்துவிட்டு, அதை விலக்கினால், அந்த அழகியின் சிவப்பு உடை, பச்சையாகியிருக்கும். இதையே, அடுத்த அழகியிடம் செய்கிற போது அவரது கறுப்பு உடை, மஞ்சளாகி விடும். மூன்றாவது அழகியிடமிருந்து, ரிப்பன் திரை விலகும்போது நீல உடை கறுப்பு உடையாகியிருக்கும். இப்படியாகத் தொடர்ந்து, மூன்று நான்கு நிமிடங்களில், மூன்று அழகிகளுக்குமாகச் சேர்த்து சுமார் இருபது தடவை உடை மாற்றம் நிகழும்.

யோசித்துப் பாருங்கள். மேடையின் மேல் நளினமான நடன அசைவுகளுடன் நின்று கொண்டிருப்பவரின் உடை, கண்ணிமைக்கும் நேரத்தில் மாறுகிறது. தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கிறது என்றால் ஆச்சரியமாக இருக்குமா? இருக்காதா? இதற்கு மைக்கேல் ஜாக்ஸனும் விதிவிலக்கு அல்ல.

மைக்கேல் ஜாக்ஸன், இந்தக் குறிப்பிட்ட ஐட்டத்தை மட்டும் சொல்லித் தரும்படி என்னிடம் கேட்டதற்கு என்ன காரணம் தெரியுமா? அவர் தம்முடைய நிகழ்ச்சியின்போது, மேடையில், தமக்கு இப்படி உடை மாறினால், ரசிகர்கள் பிரமிப்பின் உச்சகட்டத்துக்கே போய் விடுவார்கள் என்று நினைத்தார். அதற்காக, எவ்வளவு பணம் வேண்டுமானாலும் தருவதற்கு அவர் தயாராக இருந்தார்.

ஆனால், நான் அவருக்கு உடை மாறும் மேஜிக்கை சொல்லிக் கொடுப்பதற்கு இயலாது என்பதை வெகு நாகரிகமான முறையில் தெரிவித்து விட்டேன். அப்படி பதில் சொன்னதற்காக இன்றளவும் எனக்குத் துளியும் வருத்தமே கிடையாது. மைக்கேல் ஜாக்ஸன், தாம் மேடையில் உடை மாற்றி, ரசிகர்களைக் கவரும் எண்ணத்துடன்தான் அதன் ரகசியத்தைக் கேட்டார். நான் அவருக்குச் சொல்லிக் கொடுத்திருந்தால், அது மேடை மூலமும், அவரது ஆல்பங்கள் மூலமும், டெலிவிஷன் மூலமும் உலகம் முழுவதும் பிரபலமாகி விடும். அது மைக்கேல் ஜாக்ஸனின் கண்டுபிடிப்பு என்றுதான் அனைவரும் நினைப்பார்கள். மேஜிக் நிபுணர் லால்தான், மைக்கேல் ஜாக்ஸனுக்குச் சொல்லிக் கொடுத்தார் என்கிற உண்மை அமுங்கி விடும். அதன் பின், நான் அதை மேடையில் செய்கிற போது, மைக்கேல் ஜாக்ஸன் செய்வதை, நானும் செய்வதாகவே மக்கள் நினைத்துக் கொள்வார்கள். அதில் எனக்கு உடன்பாடு இல்லை.

மைக்கேல் ஜாக்ஸனுக்குக் கற்றுக் கொடுக்க மறுத்து விட்டாலும், ருஷ்ய மேஜிக் கலைஞர் ஒருவருக்கு, நான் இதைக் கற்றுக் கொடுத்திருக்கிறேன். அது மட்டுமில்லை. வேறுபல மேஜிக் கலைஞர்களுக்கும்கூட வேறு பல ஐட்டங்களையும் சொல்லிக் கொடுத்திருக்கிறேன் – அவர்கள் எல்லாரும் தொழில் சகாக்கள் என்கிற காரணத்தினால்தான். அதேபோல, நானும் சில புதிய மேஜிக் ஐட்டங்களை மற்றவர்களிடமிருந்து கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கிறேன்.

(தொடரும்)



**"அவன் எதிலும் ப்ளஸ் பாயின்டையே பார்க்கிறவன்னு சொல்றியே, எப்படி?"**

**"மனைவியிடம் வருஷம் 365 நாளில் 358 நாளைக்கு அடி வாங்கி சாதனை படைத்திருப்பதாக கின்னஸ் புத்தகத்துக்கு எழுதி அனுப்பி இருக்கான்!"**

**— வெ. ராஜாராமன்**

# தேடல்

சீதா ரவி

"உஷாவுக்கு அண்ணன் இருக்கானா?"

– அம்மா எண்ணெய்க் குடம் போல் உணர்ச்சி காட்டாமல் கேட்டது ஞாபகம் வருகிறது.

"ஊம்... பி.காம் செகண்ட் இயர்..."

"நீ போக வேண்டாம்."

"அம்மா! ப்ளீஸ்...!"

"பின்னால துணி காஞ்சிட்டிருக்கும் பாரு. போய் எடுத்துட்டு வந்து மடிச்சு வை..."

அவ்வளவுதான் பதில்! மனம் முழுக்கப் பொங்கிய என் கோரிக்கை, எழுப்பவே படாதது போல் பாசாங்கு செய்தாள் அம்மா.

கோடை விடுமுறைக்கு உஷாவுடன் கொச்சின் போக வேண்டும். அங்கே அவள் பெற்றோர் இருக்கின்றனர். உஷா, பாவம் – இங்கே பாட்டியுடன் தங்கி என் பள்ளியில் படித்துக் கொண்டிருக்கிறாள். அப்பா – அம்மாவைப் பார்க்க எத்தனை மகிழ்ச்சியாய் இருக்கும் அவளுக்கு! அந்த மகிழ்ச்சியைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆசை. அதோடு கொச்சினில் ஸ்டீமரில் போகலாம். இரவு பகல் எந் நேரமும் உஷாவுடன் சிரித்துப் பேசி ரகசியங்கள் பரிமாறிக் கொள்ளலாம். நான் கேட்கும்போதெல்லாம் எனக்குப் பிடித்த பாட்டுகளை அவள் பாடுவாள். 'நகுமோமு', 'அன்பு நடமாடும் கலைக்கூடமே', 'சுட்டும் விழிச் சுடர்தான்...' எந்த வரிசையில் வேண்டுமானாலும் கேட்கலாம்.

எல்லா கனவுகளையும் சிதைத்து விட்டாள் அம்மா. அவனிடம் எழுந்த கோபத்தைக் காட்டிலும் என் ஏமாற்றத்தைக் காட்டிலும் உஷாவைச் சமாளிப்பது சங்கடமாயிருந்தது.

"ஏன் அனுப்ப மாட்டேங்கறாங்க உங்க அம்மா...? ரீசன் என்ன...?"

'தெரியலை' என்பதா? 'உன் அண்ணா தான் காரணம்' என்பதா? 'என் அம்மா உன் அண்ணனை நம்பவில்லை; என்னையும் நம்பவில்லை' என்பதா? அல்லது 'ஆண் பிள்ளைகள் இருக்கும் இடத்துக்கு அனுப்ப மாட்டா-கள் என்னை' என்பதா...?

எப்படியோ சமாளித்து விட்டாலும் உஷாவின் அண்ணனைப் பார்த்தேயாக வேண்டும் என்று அதன் பிறகுதான் ஆசை பிறந்தது.

அந்தப் பதினைந்து வயது உணர்வை இந்த நாற்பது வயதில் நினைத்துப் பார்க்க, சிரிப்பு வருகிறது.

பெண்களைப் பெற்ற இன்றைய அம்மாக்கள் தேங்காய் உடைக்கிற மாதிரி கேள்விகள் கேட்பதில்லை. மனம் நோகாமல், வித்தியாசங்கள் புகுத்தாமல், விபரீதங்கள் தொனிக்காமல் பேச, நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது. அதற்காக கவலைகள் படாமலிருக்க முடிகிறதா என்றால், அதுதான் இல்லை.

"அவளுக்கு அண்ணன் இருக்கானா?" என்றெல்லாம் கேட்காமல், என் மகள் ஜோதியுடன் விடுமுறையைக் கழிக்க கவிதாவை அனுப்பியிருக்கிறாள் அவள் அம்மா.

பதினெட்டு வயதுக்குரிய யௌவனம், ஒளிவட்டம் போல் அவளைச் சூழ்ந்து கிடக்கிறது. என் இருபது வயது மகன் ராஜேஷ், நாற்காலியைத் திருப்பிப் போட்டு, இருபுறமும் கால்களைத் தொங்கவிட்டு, அதன் முதுகைக் கட்டிக் கொண்டு அவளைப் பார்த்தபடி உட்கார்ந்திருக்கிறான். இங்கிருந்து அவன் முதுகு மட்டுமே தெரிகிறது.

கடந்த இருபது நிமிடங்களாக இந்த அன்னியோன்னிய தோரணையில் இருவரும் குரல் ஓங்காமல் பேசிக்கொண்டிருக்

கிறார்கள்.

இரண்டு முறை வேலைகளைக் கற்பித்து "ராஜேஷ்!" என்று அவனைக் கூப்பிட்டுப் பார்த்தாயிற்று.

"இதோ, பத்து நிமிஷத்துல வரேன்..." என்று வாய்தா வாங்கிக் கொண்டிருக்கிறான்.

சந்தேகப் பேயை விரட்டி விரட்டி நான் சோர்ந்திருக்கிறேன். கூடவே, சந்தேகத்தை அவர்கள் உள் அறையில் அமர்ந்திருப்பதைப் பார்க்கவாவது முடியும்.

ராஜேஷ் என்ன சொன்னானோ... பொய்க் கோபத்தில் கவிதா கண்கள் பிரகாசிக்க, கஷ்டப்பட்டுச் சிரிக்காமலிருக்க முயன்று கொண்டிருக்கிறான்.

அவன் இரண்டு கரங்களையும் கூப்பி, தலைக்கு மேல் தூக்கிக் கெஞ்சுவது போல் நடிக்க, பருத்திப் பூச் சிரிப்பில் அவள் முகம்



அனுமதிக்கும் என் சின்னபுத்தியின் பேரில் ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது.

'இந்தக் கடங்காரி ஜோதியாவது சீக்கிரம் வந்து தொலைக்கலாம். 'கிப் ஹர் கம்பெனி அண்ணா, இதோ வந்துடறேன்' என்று சைக்கிளை எடுத்துக் கொண்டு போய் முக்கால் மணி நேரமாகப் போகிறது.

சமையலறையில் காய்கறிகளை நறுக்காமல் டைனிங் டேபிளுக்கு எடுத்து வருகிறேன். இங்கிருந்து ஒரு கோணத்தில் விரிகிறது. அந்தக் காட்சியழகில் லயித்து விடாமலிருக்க, நான் மிகவும் சிரமப்பட வேண்டியிருக்கிறது.

இரண்டு பெண்களும் கூண்டுக்குள் அடைந்த குருவிகள் போல் படுத்து விட்டார்கள். ஸ்ருதியோவின் மங்கலான ஒலியைத் தாண்டி அவர்களுடைய சிரிப்புச் சாரல், மூடிய அந்த அறைக் கதவைத் தள்ளிக் கொண்டு சிலீரென்று ஹாலுக்குள் வருகிறது.

தன் அறையிலிருந்து வெளியேற்றப்பட்டு ஹால் சோபாவில் தலையணை போட்டுப் படுத்திருக்கிறான் ராஜேஷ்.

விசு ரிமோட் பட்டனை அழுத்தி விட்டுச் சோம்பல் முறிக்கிறார்.

"படுக்கப் போறேன்..." என்று எங்கள் பெட்ரூம் நோக்கி நடப்பவரை நிறுத்தி, மகனைக் கண்களால் சுட்டுகிறேன்.

'பேசுங்கள், திட்டமிட்டபடி...'

இந்தோ – பாக் பேச்சு வார்த்தைக்குக் கூட அவ்வளவு தயார் செய்வார்களா என்பது சந்தேகம். நேற்றிரவு முழுதும் ராஜேஷுடன் எப்படிப் பேச வேண்டும் என்று வார்த்தை வார்த்தையாகக் கோத்து வைத்திருக்கிறோம் என் கணவரும் நானும்.

"ராஜேஷ்!" அழைக்கிறபோதே குரலில் அதிகப்படி மரியாதை புகுத்துகிறேன்.

புத்தகத்திலிருந்து பார்வை திருப்பாமல் "ம்?" என்கிறான்.

விசு அருகே போய் நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்காருகிறார். நானும் அருகே தரையில் அமர்கிறேன்.

"கவிதா இஸ் எ நைஸ் கர்ல்... இல்லையா?" – சம வயதின் ஒட்டுறவை வரவழைத்துக் கொள்ள பெரிதும் முயற்சி செய்கிறார் விசு.

"ஆமாம். வெரி வெரி நைஸ் கர்ல்..." – அவன் ஆச்சர்யப்படாமல், ஆவலையும் நேசத்தையும் மறைக்காமல் பதில் சொல்வதைப் பார்க்க எனக்குப் பெருமையாய் இருக்கிறது.

'தொடர்ந்து பேசத்தான் வேண்டுமா...?' என்றுகூட போராட்டம் எழுகிறது. இனி பேசாமல் எழுந்து போகவும் முடியாது.

"இந்த வயசுல உனக்கு எல்லாமே ம்... வாட் ஷல் ஐ ஸே, கொஞ்சம் கூடுதல் அழகா தெரியும் ராஜேஷ்..."

– அவ்வளவு ஒத்திகைக்குப் பிறகும் விசு வார்த்தைகளுக்குத் துழாவுகிறார்.

"ஏன்... உங்க வயசுக்கு மட்டும் எப்படித் தெரியுதாம்...? இப்பத்தானே சொன்னீங்க... கவிதா இஸ் எ நைஸ் கர்ல்..."

கோபப்படுகிறானா? எனக்குள் பயம் பந்தாடுகிறது. மனத்தைப் படம் பிடிக்கும் எக்ஸ்ரேக்கள் இருந்தால் எவ்வளவு சௌகரியம்!

"எங்கே அது...?"

தயாராயிருக்கும் ராகி கயிறை விசுவிடம் தருகிறேன்.

"கவிதா உன் தங்கையோட தோழி. உனக்கும் சகோதரி மாதிரி. நாளைக்கு ரக்ஷா பந்தன். இந்த ராகி கயிறை அவகிட்டே கொடுத்து உன் கையிலே கட்டச் சொல்றேன்..."

முகம் சிவக்க எழுந்திருக்கிறான்.

"ஏன் நாளைக்கு வரைக்கும் காத்திருக்கணும்? அதுவரைக்கும் நான் யோக்யமா இருப்பேன்னு எதை வைச்சு சொல்றீங்க...?"

"ராஜேஷ்!"

"சும்மாயிருங்கம்மா... கவிதா வேணா உங்களுக்குப் புதுசா இருக்கலாம். ஆனா, என்னை உங்களுக்குத் தெரியாதா? இந்த பித்தளை ஜரிகை கயிறை நம்பற அளவுக்கு என்னை நீங்க நம்பலை இல்லியா...?"

"அப்படியில்லை ராஜேஷ். இது கஷ்டமான வயசு. நாங்களும் இதைத் தாண்டி வந்தவங்கதான். யு கன் பீ குட் ஃப்ரெண்ட்ஸ்..."

குரல் உயர்த்த வேண்டாம் என்று விசுவின் கையை அழுத்துகிறேன்.

"எக்ஸாக்ட்லி! அதனாலதான் இது அபத்தம்ங்கறேன்..." விசுவின் கையில் மினுமினுக்கும் ரக்ஷாபந்தனைப் பிடுங்கி விசிறியடிக்கிறான்.

"அப்பா! கவிதா எனக்கு ஃப்ரெண்ட்தான். ஊட்டியில டீ எஸ்டேட்டுல வேலை பார்க்கற அவ அத்தானைப் பத்தி மூஞ்சி சிவக்க சிவக்கப் பேசற அளவுக்கு என் ஃப்ரெண்ட். போதுமா...?"

இந்தத் திருப்பத்தை எதிர்பாராமல் திகைக்கிறோம்.

"இந்த விஷயத்தை உங்ககிட்டே சொல்ல எனக்கு கவிதாவோட அனுமதி கிடையாது. ஆனா உங்க சந்தேகத்தைப் போக்க வேற வழி எனக்குத் தெரியலை... இதைப் பத்தி அவகிட்டே தயவு செய்து பேசாதீங்க..."

மௌனம் தவிர வேறு எது பதிலாக முடியும்?

பூ மனத்தைப் புண்ணாக்கிய துக்கத்தில் அழுகை வருகிறது.

ராஜேஷ் அதைக் கவனித்துவிட்டு என் அருகே வந்து உட்காருகிறான்.

"வருத்தப்படாதீங்க. உங்க கவலை எனக்குப் புரியுது. ஆனா இந்த டிராமாவெல்லாம் எதுக்கு? பட்டுன்னு தேங்காய் உடைக்கிற மாதிரி எங்கிட்டே பேசியிருக்கலாமில்லே..."

திகைத்துப் போய் இருவரும் அவனைப் பார்க்கிறோம்.

ராஜேஷ் என் கழுத்தைக் கட்டிக் கொண்டு கன்னத்தில் அவசரமாக முத்தமிடுகிறான்.

"எங்கம்மா!" என்றபடி அவன் அப்பாவை சவாலுடன் பார்க்கிறான்.

அழகான கணங்களுக்கு அர்த்தம் இருக்க வேண்டுமா என்ன...? ●

"எர்த் லிங்க் கட் ஆயிடுச்சக்கா. சிக்னல்கள் கிடைக்கவில்லை. நம்முடைய சிக்னல்களும் போய்ச் சேருகிற மாதிரி தெரியலை..." - ரஷ்ஷு பதற்றத்துடன் சொன்னான்.

"ஆ..! என்ன... என்ன சொல்றே? எப்படி கட் ஆகும்? கம்ப்ளீட் செட்டைப் பிரிச்சுப் போடு!"

பிரித்தார்கள். ட்ரான்ஸ்மிட்டரில் ஐ.சி. ஒன்று இலேசாய்க் கருகிப் போயிருந்தது.

"கோபக்ஸ்! சொல்லு எப்படி நடந்தது?"

"எங்கியோ ஷார்ட் சர்க்யூட்."

"அதுதான் எப்படி? கெட்டுப் போக சான்ஸே இல்லை. உன்னை சந்தேகிக்கிறேன். இது உன் வேலைதான்" - சூர்யா கத்தினாள்.

ஆன்டனாவின் திசையைச் சற்று திருத்தினார்கள். புதிய ஐ.ஸி. ஒன்றை மாற்றி சர்க்யூட்டையே மாற்றியமைத்தார்கள். சூர்யா அதில் சில மாற்றங்கள் செய்ய, இப்போது டிரான்ஸ்மிட்டர் வேலை செய்ய ஆரம்பித்தது. ஆனால் உஷ்...ஷ்...ஷ்... என்று சப்தம் போட்டதேயொழிய கீழிருந்து சிக்னல்கள் கிடைக்கவில்லை. அதுவும் பத்து நிமிடத்தில் அடங்கிப் போய் மீண்டும் செத்து விட்டது. ஏன்? இனி பிரயோஜனமில்லை. இனிமேல் கீழிருந்து அவர்களாக முயன்று தொடர்பு ஏற்படுத்திக் கொடுத்தால்தான் உண்டு. பார்க்கலாம்; எப்படியும் ஒரு நான்கு மணி நேரத்திற்குள் நிச்சயம் லிங்க் கிடைக்கும். பதறிக் கொண்டிருப்பார்கள்.

அவர்கள் காத்திருக்க ஆரம்பித்தனர்.

# உயிர்களைத் தேடித் தேடி...

"நானா? நான் எதுக்காக இதைச் செய்யணும்?"

"எனக்கெப்படித் தெரியும்? நீங்கள் இரண்டு பேருமே பொய்யர்கள். நம்ப முடியாது. உங்களுக்குள்தான் எத்தனை மர்மங்கள்!"

"அக்கா! குழந்தைத்தனமாய்ச் சிந்திப்பதை நிறுத்து. ஏழு கோடி கிலோ மீட்டர் தூரம் தாண்டி வந்து, உயிருக்கு எந்த உத்தரவாதமுமில்லாமல் அனாதையாய் நிற்கும் நாம் மூவரும் ஒருத்தரை யொருத்தர் நம்பித்தான் ஆக வேண்டும்."

"இல்லைடா. இங்கு யாருக்கும் யார் மேலயும் நம்பிக்கையில்லை. உடன்பிறந்த தம்பிக்கே என்னிடம் மறைக்க ரகசியம் உண்டு. இது மெஷின். எம்மாத்திரம்?"

கோபக்ஸ் வந்து அவள் தோளைத் தொட்டது.

"மிஸ் சூர்யா! கருத்து மோதல்கள் வேண்டாம். பேசுவதை நிறுத்தி விட்டு டிரான்ஸ்மிட்டரை சரிசெய்ய முடியுமா என்று பார்ப்போம்."

அப்புறம் மூவரும் நீண்ட நேரம் உட்கார்ந்து அதனுடன் போராடினார்கள். ஆனால் அன்றைக்கும், மறுநாளுமாக இரண்டு நாட்களாகியும் லிங்க் கிடைக்கவில்லை. மூவருக்கும் இலேசாய் கலவரம் பரவ ஆரம்பித்தது.

"அக்கா! தரைக் கட்டுப்பாடு நிலையத்தின் தொடர்பில்லாமல் நாம் எப்படித் திரும்ப முடியும்? யார் வழிகாட்டுவார்கள்?"

மரணபயம் அவர்களைப் பற்றிக் கொண்டது. என்ன செய்ய முடியும்? திரும்புவதற்கு வழியேயில்லை.

"கோபக்ஸ்! எப்படியென்று யோசனை சொல்லு."

"என்னைக் கேட்டால்? இதற்கெல்லாம் நான் தயார் செய்யப்படவில்லை. சாரி!"

"ஐயோ!"

இருவருக்கும் முகம் வெளுத்தது. பயத்தில் வாய் உலர்ந்து போய், காதோரங்களில் ஜுரம் போல் உஷ்ணமாய்



செய்யாறு தி. தா. நாராயணன்

உணர்ந்தார்கள். முடிவேயில்லாத இந்தப் பிரபஞ்சத்தில் எப்படியென்று வழி தேடுவது? இந்தப் பக்கமா அந்தப் பக்கமா? கிழக்கா மேற்கா? எது புரியும்? கண்ணைக் கட்டி விட்ட பித்துக்குளியாய்ச் சுற்றிச் சுற்றி கடைசியில் விண்வெளியின் நகரும் சமாதியாய் ஆகிவிடுவோமா?

"ரஷ்ஷு! சின்னக் கம்பியின் இணைப்பு கூட யமனாகிவிடும் என்றாரே அப்பா. அது நிஜமாகி விட்டதே. அப்பா எப்படி துடிக்கிறாரோ?"

டிரான்ஸ்மிட்டருடன் இது



வரையிலும் சிரத்தையாய்ப் போராடிக் கொண்டிருந்த கோபக்ஸ் ஒன்றும் செய்ய முடியாமல் ஸ்குரு டிரைவரை வீசியடித்தது.

"கோபக்ஸ்! என்ன பண்ணலாம் சொல்லு. பயமாயிருக்கிறது. எதையாவது செய்!"

"என்னைத் துளைக்க வேண்டாம். என்னிடம் எதுவுமில்லை. இது எதிர்பாராத விபத்து. என்னிடம் விடையில்லை. நீங்கள் இருவரும் ஏதாவது உபாயம் சொன்னால் அதன்படி நடக்கிறேன். இல்லையென்றால் செத்துப் போவதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. அதன் உபாதைகள் எனக்குப் புரியாது. என்னைக் கொஞ்ச நேரம் தனிமையில் விடுங்கள். என் லைஃப்பை கடைசியாக ஒருமுறை ரீப்ளே பண்ணிப் பார்க்க விரும்புகின்றேன்" – சொல்லி விட்டு தனியாக ஓரிடத்தில் சென்று தலையைக் கவிழ்த்துக் கொண்டது.

## 13

இப்போது இருவருக்கும் படபடப்பு அதிகமாகியது. எப்படியும் கோபக்ஸுக்கு எல்லாந் தெரியும்; சமாளித்து விடும் என்று உள்ளே எண்ணிக் கொண்டிருக்க, அந்த நம்பிக்கையும் போய் விட, ரஷ்ஷு கன்னத் தசைகள் இறுகிப் போய் வெறிக்க ஆரம்பித்தான். கண்ணில் நீர் கோத்தது.

மரணம்தான். ராக்கெட் எத்தனை நாட்களுக்குத்தான் மைனஸ் நாலு டிகிரி குளிரிலிருந்து நம்மைக் காப்பாற்றும்? ஒருநாளைக்கு அதன் கட்டுமானங்கள் இற்றுப் போய் குளிரில் விறைத்துச் சாக வேண்டியதுதான். அதற்கு முன்பாக உணவு? அது வேகமாய்த் தீர்ந்து கொண்டு வருகிறது. பட்டினியால் சாக வேண்டியதுதான்.

பொழுது இருட்ட ஆரம்பித்தது. அடிவானத்தில் பிரகாசமான பூமி எழுந்தது. சிலுசிலுவென்று காற்று. சூர்யாவுக்கு பயத்தில் சிலிர்த்துக் கொண்டது. இனி பூமியில் போய் இறங்க வே

முடியாதா? நெஞ்சையடைத்தது.

என் அருமை இந்திய நாடே! என் சொந்தங்களே! அப்பா அப்பா! அழுகை பீறிட்டது. படித்த அறிவும், கேட்ட ஞானமும், உணர்ந்த தெளிவும், எல்லாம் விடைபெற்றுக் கொள்ள உயிர் பற்றிய பயத்தில் உறைந்து நின்றாள். அப்பா! எங்களை எண்ணி எப்படித் துடிக்கின்றாரயோ? எய்ட்த் போர்ட் அருகே பழியாய்க் கிடப்பாய். எனக்குத் தெரியும், புலம்பிக் கொண்டிருப்பாய். குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

"ரஷ்ஷு! எப்படி யோசித்தாலும் நாம் இரும்பிப் போக வழியில்லை. பூமியில் அவர்கள் முயற்சி செய்து லிங்க் ஏற்படுத்த வேண்டும். இரண்டு நாட்களாகியும் லிங்க் வராததால் அங்கும் ஏதோ பிரச்னைன்னுதான் தோணுது. வேறொரு ராக்கெட்டை நமக்காக அனுப்பினால் ஒருவேளை தப்பிக்கலாம். செய்வார்களா?" - கோபக்ஸ் கேட்டது.

ரஷ்ஷு பலமாகத் தலையாட்டினான்.

"தலைவர் ஒப்புதல் தர மாட்டார். செலவு ஐயாயிரத்துப் பதினைந்து கோடி. அதைவிட எங்கள் இரண்டு பேருடைய உயிர் போனால் பரவாயில்லை அவர்களுக்கு. உன்னைப் போன்ற மாடல்கள் லட்சக்கணக்கில் கிடைக்கின்றன. புதிதாகவும் செய்து கொள்ள முடியும்" - சொல்லிவிட்டு கண்கலங்கினான்.

"என்ன எங்களுக்காக அங்கே அழக்கூடிய ஒரே ஜீவன் எங்கள் அப்பா. அப்பா... அப்பா...!"

சூர்யா ரஷ்ஷுவிடம் போய் நின்றாள். கண்கள் நீர் சொரிந்தன.

"ரஷ்ஷு! அப்பாவின் பயம் நிஜமாகி விட்டது."

ரஷ்ஷு பதில் பேசவில்லை. தரையை வெறித்துக் கொண்டிருந்தான். மனம் பாதித்திருக்கிறதோ? உட்கார்ந்திருக்கும் நிலையில் ஒரு விறைப்புத் தன்மை தெரிந்தது. சூர்யா குறுக்கும் நெடுக்குமாய் உலவியபடி புலம்பிக் கொண்டிருந்தாள்.

மறுநாள் பொழுது விடிந்து விட்டது. முதல் நாள் மேல் சேம்பரில் போய் புகுந்து கொண்ட கோபக்ஸ் அப்புறம் வெளியே வரவேயில்லை. சூர்யாவும் ரஷ்ஷுவும் தூங்கவில்லை. "ரஷ்ஷு! இங்கிருக்கும் பாசிகளை உணவாக்கிக் கொள்ள முடியுமா என்று பார்க்கலாமா?"

"இல்லை. இங்கு வந்து இரண்டு மாதங்களிலேயே அதை ஆராய்ந்து பார்த்து விட்டோம். லாயக்கற்றது. அது விஷத்தன்மை கொண்ட ஒரு பாசியினம். ஸோ! நாம் சாகத் தயாராவோம் அக்கா!"

சூர்யா எழுந்து உட்கார்ந்தாள். இப்போது அழுகை வரவில்லை. சாவை எதிர்நோக்கும் விரக்தி. அப்புறம் கொஞ்ச நேரம் சிரத்தையாய் விவாதித்து உணவுக் கையிருப்பு கரையும் வரை வாழ்வது. அப்புறம் உயிரை மாய்த்துக் கொள்வது என்று தீர்மானித்தார்கள். எப்படிச் சாவது என்பதற்கு ரஷ்ஷு வழி சொன்னான்.

"அதொன்றும் கஷ்டமில்லை. ஈர்ப்பு விசை குறைவாயுள்ள இக் கிரகத்தில் சாவது எளிது. சராசரி 250 கி. மீட்டர் வேகத்தில் காற்று அடிக்கும் மாலை நேரங்களில் பிடிப்பு எதுவுமில்லாமல் உயரமான இடத்தில் நின்றால் போதும் ஆளைத் தூக்கிச்

---

## விதியும் பகுத்தறிவும்!



"விதி என்றால் என்ன? பகுத்தறிவு என்றால் என்ன? விளக்கம் கொடுங்கள்" என்றான் ஒருவன்.

இஸ்லாமிய கலீபாக்களில் ஒருவரான ஹஜ்ரத் அலி அவனிடம், "உன் வலது காலைத் தூக்கு!" என்றார். அவன் தன் வலது காலைத் தூக்கியபடி நின்றான். "சரி... இப்பொழுது நீ தூக்கிய காலைக் கீழே இறக்காமலேயே இடது காலையும் தூக்கு" என்றார். "அது எப்படி முடியும்?" என்றான் அவன்.

"உன்னால் ஒற்றைக் காலை மட்டும்தான் தூக்க முடிந்தது. அதுதான் உனது பகுத்தறிவு. மற்றொரு காலைத் தூக்க முடியாமல் திண்டாடுகிறாயே அதுதான் விதி!" என்று கூறிவிட்டு ஹஜ்ரத் அலி நடந்தார்.

— டி.எஸ். பாலு

சென்று மலைகளில் மோதிச் சிதற அடித்து விடும்."

சூர்யா பயத்தில் சிலிர்த்துக் கொண்டாள். அப்போது கோபக்ஸ் வந்து நின்றது.

"என்ன அழுது முடித்து விட்டீர்களா? இதுதான் நான் உங்களுக்குக் கொடுத்த தண்டனை. சந்தேகித்தீர்களே. ஓ.கே! மிஸ்டர் தாமுவுக்கு மீண்டும் உங்கள் நன்றியைச் சொல்லுங்கள். இந்த நூற்றாண்டின் மேதை. இப்படி ஒரு விபத்து ஏற்படலாம் என்று எதிர்பார்த்து நாம் திரும்புவதற்கான முழு ப்ளானை என் டிஸ்க்கில் பதிவு செய்திருக்கிறார். செவ்வாயிலிருந்து கிளம்ப வேண்டிய ஆங்கிள், வேகம், ஆங்குலார் டிஸ்டன்ஸ், பறக்க வேண்டிய நேரம்.. எவ்ரி திங். நான் இந்நேரம் வரை அதை என் டிஸ்க்கிலிருந்து பிரித்து ரீப்ளே பண்ணி முடித்து, நம் கம்ப்யூட்டரில் ஃபீட் பண்ணி முடித்து விட்டேன். பயம் வேண்டாம்."

சந்தோஷ மிகுதியில் இருவரும் கண்கள் பொங்கச் சிரித்தார்கள்.

"ப்ரோக்ராம் வங்களா விரிகுடாவில் இந்தியாவின் தென்முனையிலிருந்து எட்டு நாட்டிகல் மைல் தூரம் கிழக்கில் கடலில் இறங்குவோம். உங்களை முழுசாய் மிஸ்டர் தாமுவிடம் சேர்ப்பேன்."

சூர்யா நினைத்துக் கொண்டாள். என்னைக் கொல்ல உத்தரவு வந்தாயிற்று. இதுவும் சந்தர்ப்பத்தை பார்த்துக் கொண்டிருக்கிறது. இருப்பினும் எங்களை முழுசாய் தாமுவிடம் சேர்ப்பேன் என்று பொய் சொல்லக் கூடத் தெரிகிறதே இதற்கு?

"ரஷ்ஷு! எவ்வளவு சோதனைகள் வந்தாலும் நாம் வந்த வேலையை முடித்துக் கொண்டுதான் கிளம்ப முடியும். மிஸ் சூர்யா முன்பைப் போல கம்ப்யூட்டரைக் கிளறிப் பார்த்துத் திரும்பிப் போகும் ப்ரோக்ராமை தேடாதே. கிடைக்காது. அது மட்டுமல்ல. உன் தொந்தரவும் எல்லை கடந்து விட்டது. இனிமேல் பொறுத்துக் கொள்ள மாட்டேன்."

அவள் அதன் பேச்சைக் கண்டுகொள்ளவில்லை.

"உஸ்..ஸ்.. அப்பாடா! ஒருமுறை செத்துப் பிழைத்தோம். சனியனே! இதை முன்பே சொல்வதற்கென்ன?"

"கூக்... கூக்... கூக்."

"என்ன?"

"என்னுடைய சிரிப்பு. இரண்டு பேரும் ஒரு விஷயத்தை கவனித்தீர்களா? என் மீது சந்தேகப்பட்டீர்களே. இப்போது நான்தான் உங்கள் உயிருக்கு அத்தாரிட்டி. நம்பித்தான் ஆக வேண்டும்."

சூர்யா தலைகுனிந்தாள்.

"இன்னுமொரு விஷயம். மனிதர்கள் உங்களை நம்ப முடியாது. ஒருவேளை வஞ்சகமாய் என்னை அழித்து விட நீங்கள் திட்டம் போட்டிருந்தால் இனி மேல் அது முடியாது. என் உதவியில்லாமல் ராக்கெட் பூமியைப் போய்ச் சேராது. எனவே சூர்யா! நீ வரம்பு மீறாதவரை யாருக்கும் கஷ்டமில்லை."

சூர்யா சோர்ந்து போனாள். இன்று கோபக்ஸை ஒழித்து விடத் திட்டமிட்டது நடக்காது போலிருக்கிறது. ஐயோ! இல்லையென்றால் அது என்னை அழித்து விடுமே. தனிமையில் இருந்த போது ரஷ்ஷுவிடம் யோசனை கேட்டாள். அவன் கேட்ட




"ஏழு மணிக்கு ஆரம்பிக்கிற உண்ணா விரதத்துக்கு இப்படி ஏழரை மணிக்கு வர்றியே?"

"வீட்ல டிஃபன் தயார் பண்ண கொஞ்சம் லேட் ஆயிடிச்சு தலைவரே... சாரி!"

— சீர்காழி ரேவதி



**"ஆபரேஷனுக்கு அப்புறம் என்னால ஓட முடியுமா டாக்டர்...?"**

**"எதுக்குக் கேட்கறீங்க...?"**

**"நீங்க பில்லை நீட்டுவீங்களே!"**

**— வி. சாரதி டேச்சு**

## அடேங்கப்பா!



**க**ண்ணுக்கு எதிரே சின்னஞ்சிறு உருவில் தெரியும் கல் சாதாரணமானதில்லை. நீல வைரக் கல்! சுமார் எட்டு கேரட் அளவுள்ள இதன் மதிப்பு எவ்வளவு தெரியுமா?

சுமார் ஒன்பது கோடி ரூபாய்! அண்மையில் ஜெனிவா நகரில் ஏலத்துக்கு வந்தது இந்த வைரம்!

- சி.எம்

---

மாத்திரத்தில் எரிந்து விழுந்தான்.

"கோபக்ஸுக்கு ஏதாவது நடந்ததோ, அப்புறம் உன்னை அழிக்கவும் தயங்க மாட்டேன். ஜாக்கிரதை."

'சே! இவனுக்கு மறை கழன்டு விட்டதா? எந்த நிமிஷம் யார் பக்கம் நிற்கிறான் என்று தெரியவில்லையே!'

"இல்லையென்றால் அது என்னைத் தீர்த்து விடுமே?"

"அது உன் கவலை. சமாளிப்பது உன் சாமர்த்தியம். அதற்காக கோபக்ஸ் அழிந்து போவதை அனுமதிக்க மாட்டேன்."

**அ**டுத்த வாரத்தில் ஒருநாள் சீக்கிரமாகவே எஸ்.ஈக்கு திரும்பி விட்டான். அசதியாய் பொத்தென்று படுக்கையில் சாய்ந்தான். வயிற்றில் கொக்கி போட்டு இழுத்தது.

"கோபக்ஸ்!" - பதிலில்லை. எங்கியோ போயிருக்கிறது. ரஷ்ஷு இரவில்தான் வருவான். இது எங்கே போயிருக்கும்? உள்ளே தேடினான்; இல்லை. கோபக்ஸ் அங்கு இல்லை. ஆனால் வேறொன்று கண்ணில் பட்டு விட்டது. மேல் சேம்பரில் உள்ளடங்கியிருந்த ஒரு மூலையில் பதுவிசாய் அந்த கறுப்புப் பெட்டி உட்கார்ந்திருந்தது. சுற்றிலும் ஒருமுறை நோட்டமிட்டான். அந்தப் பெட்டியைக் கையிலெடுத்தான். முழுவதும் கறுப்பு. மினு மினுப்புடன் கனமாயிருந்தது.

திறக்க முடியவில்லை. பூட்டப்பட்டிருக்க வேண்டும். இங்கே எந்த முயற்சியும் வேண்டாம். கோபக்ஸ் வந்து விட்டால் ஆபத்து. க்விக்... க்விக்... அது வருவதற்குள் எடுத்துக் கொண்டு ஓடி விடு. ஓடு - உள்ளே ஹைபோதாலமஸ் எச்சரிக்கை சிக்னல்கள் காட்ட, விண்கலத்தை விட்டு வேகமாய் இறங்க ஆரம்பித்தான். இறங்கி விட்டான். இன்னும் மூன்று படிகள்தான் பாக்கி! மேலே 'தடக்' என்று எதுவோ இடறி விழும் சப்தம். ஓ! கோபக்ஸ்தான். நாம் சரியாக செக் பண்ணத் தவறி விட்டோமா? நம்மைப் பார்த்து விட்டிருக்குமே ஓடு... ஓடு... பார்த்தால் உடனே தீர்த்து விடும். ஓடு!

ஓடினான். எல்லா ஆவேசத்தையும் காட்டி வேகமாய்ப் பறக்க, ஓடி... ஓடி... ஒரு கட்டத்தில் அதற்கு மேல் முடியாமல் மூச்சு நின்று விடும் போல திணறி, அப்படியே கீழே உட்கார்ந்து விட்டான். மார்பறைகள் ஏங்க, 'ஸ்ஸ் ஸ்ஸ்' இழுத்து இழுத்து மேல் மூச்சு இரைத்தது.

இயல்பு நிலைக்கு வர கொஞ்ச நேரமாகியது. ரொம்பத் தூரம் வந்தாயிற்று. இங்கிருந்து பார்க்க ராக்கெட் சற்று சின்னதாய்த் தோற்றமளித்தது. இனி பயமில்லை. பாதுகாப்பான தூரத்திற்கு வந்து விட்டோம்.

பெட்டியைக் கையிலெடுத்தான். திறக்கவே முடியவில்லை. பேசாமல் உடைத்து விடலாம். ஆனால் திருப்பி வைக்க முடியாது. தெரிந்து விடும். உடைக்காமல் மேலே அதன் பெயரோ அல்லது வேறு ஏதாவதோ இருந்தாலும் போதும். தயாரித்த கம்பெனியின் பெயர் இருந்தால் கூட போதும். அது எதை எதை தயாரிக்கிறது என்று தெரிந்த விவரங்களை வைத்து ஒரு மாதிரி யூகித்து விடலாம். ஊஹூம். எதுவுமே தட்டுப்படவில்லை. சரி வேறு வழியில்லை. என்ன நடந்தாலும் நடக்கட்டும். கைக்கு அடக்கமான ஒரு பெரிய கல்லை எடுத்து அதை உடைக்க கையை ஓங்கியபோது.

"சாரி சூர்யா!" - கோபக்ஸ் நின்று கொண்டிருந்தது. அதன் கையில் லேசர் கன். இவனையே குறிபார்த்துக் கொண்டிருந்தது.

(தொடரும்)

• துணைவேந்தர் கண்ணையன்



# விவசாயம் படித்தால் வேலை கிடைக்காதா?

இந்தியாவிலுள்ள விவசாயப் பல்கலைக் கழகங்களுள் பஞ்சாபிலுள்ளதற்கு அடுத்தபடியாக மிகச் சிறப்பாகச் செயல்படுவது கோவை விவசாயப் பல்கலைக் கழகம். இது ஒருபுறமிருக்க, 'விவசாயப் பல்கலைக் கழகத்தில் படிப்பது வேஸ்ட்; வேலை வாய்ப்புக்கு எந்த உத்தரவாதமுமில்லை' என்றும் மாணவர்கள் தரப்பில் பேச்சு உண்டு.

உண்மை நிலவரம் என்ன? இந்தப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் கண்ணையனை அணுகிக் கேட்டோம்:

''கல்வி, ஆராய்ச்சி, விரிவாக்கம்- இந்த மூன்றும்தான் எம் இலக்கு. முக்கியமாக, விவசாய விஞ்ஞான ஆய்வுகளில் குறிப்பிடத் தகுந்த சாதனைகள் புரிந்திருக்கிறது எங்கள் பல்கலைக் கழகம்.

''விவசாயம் என்றால் விவசாயம் மட்டுமல்ல! தோட்டக்கலை, வன இயல், விவசாயப் பொறியியல்- Food Processing Engineering என்றே ஒரு படிப்பு இருக்கிறது- என எங்கள் பார்வை பரந்துபட்டது. சென்ற வருடம் மிகச் சிறப்பான பல்கலைக் கழகம் என்ற பெருமையும் விருதும் எங்களுக்குத்தான் கிடைத்தன'' என்றார்.

''ஒன்பது கல்லூரிகள் உங்கள் பல்கலைக் கழகத்தின் கீழ் இயங்குகின்றன. ஒன்பதிலும் ஒரே சீரான கல்வித்தரம் உள்ளது என்று சொல்வீர்களா? அப்படியிருந்தால் மாணவர்கள் சேர்க்கை குறைவு என்கிற குரல் ஏன் வருகிறது?''

''கல்வித் தரத்தைப் பொறுத்தவரை- இங்கே ஆக்ஸ்ஃபோர்டு லெவலில் உள்ளது என்று அடித்துச் சொல்லுவேன். 'நவீனத்துவத்தை நோக்கி...' என்பதுதான் எங்கள் தாரக மந்திரம். உற்பத்தியில் என்னென்ன புது ஐட்டங்கள் கண்டுபிடித்திருக்கிறோம் தெரியுமா? சன்னரக அரிசி என்கிற 'கான்ஸெப்டை'யே முதல் முதலில் யோசித்து உருவாக்கியது நாங்கள்தான்! (GEP-24) லேட்டஸ்ட் கண்டுபிடிப்பு- பூச்சிகளைப் பூச்சிகளாலேயே கொல்வது! பூச்சிக் கொல்லி மருந்துகளுக்காகச் செலவிடும் கணிசமான பணம் இனி விவசாயிகளுக்கு மிச்சமாகும். நவீன விவசாயத்தில் ஆர்வமுள்ள மாணவர்களுக்கு இப்பல்கலைக் கழகம் ஒரு வரப்பிரசாதமாக இருக்க வேண்டும் என்பதற்காகவே பாடுபடுகிறோம்.''

''இத்தனை பெருமைகளைச் சொல்கிறீர்கள். ஆனால் அக்ரி. யூனிவர்சிடியில் படித்தால் வேலை வாய்ப்புகள் இருப்பதில்லை என்கிறார்களே மாணவர்கள்?''

''அரசு வேலையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தால் சிக்கல்தான். அது அத்தனை சுலப சாத்தியமில்லை என்பதை நாங்களே மாணவர்களுக்குச் சொல்லவும் தயங்குவதில்லை. எங்கள் நோக்கம், மாணவனை ஒரு அரசுப் பணியில் அமர்த்துவதல்ல. விவசாய விஞ்ஞானத்தில் ஆய்வுகள் மேற்கொள்ள, வெளிநாடு சென்று மேற்படிப்பைத் தொடர ஏராள வாய்ப்புகள் கொட்டிக் கிடக்கின்றன இங்கே. சுய வேலை வாய்ப்புக்கான அனைத்துக் கதவுகளையும் நாங்கள் திறந்து வைக்கிறோம். பல தனியார் நிறுவனங்கள் அக்ரிகல்சர் பிசினஸ் மானேஜ்மென்ட் அறிந்த மாணவர்களை லட்சம் லட்சமாய் சம்பளம் கொடுத்துக் கொத்திச் செல்ல-உலகம் முழுவதும்- காத்திருக்கின்றன. நவீன விவசாய விஞ்ஞானமென்பது தவிர்க்க முடியாத துறை. இதன் எதிர்காலம், கம்ப்யூட்டரின் எதிர்காலத்துக்கு இணையானது. வேலை வாய்ப்பில்லை என்கிற பேச்சுக்கே இடமில்லை.''

— கிருஷ்

படம்: வெங்கடேஷ்



**மா**ர்க்கெட் கவிஞர்களுக்கெல்லாம் என்ன ஆச்சுன்னு தெரியலை. ரீஸன்ட் டேஸா ஒரு கவிதை வரலை. ப்ரின்ட் மீடியா கவிஞர்களெல்லாம் ஒன்-பை-ஒன்னா ஸெவன்டி எம்.எம்முக்குப் போக ஆரம்பிச்சிட்டது சமீப காலத்து டெவலப்மென்ட். (இப்ப வர்ற சினிமா டைட்டில் கார்டுல எத்தனை புதுப் பேர்ங்கறீங்க?) அதுக்காக மன்ற உறுப்பினர்கள் ஸ்டிரைக் பண்றது நியாயமில்லை. பழசை மறக்காத விஜயராகவனுக்கு மட்டும் என் ஸ்பெஷல் பாராட்டு. கவிதைல தொக்கி நிக்கற ஹ்யூமருக்கும் சேர்த்து :

புலம்புகிறார் நண்பர்
'முப்பது வருஷமா இங்கதான்
குப்பை கொட்டிட்டிருக்கேன்...'
உண்மைதான்
தெருக்கோடியில்
மலையாய் நிற்கும்
குவியலே சாட்சி.
முயற்சிக்கு முன்னரே
குப்பையில்
மின்சாரம்!
பார்த்தாலே
அடிக்குதே ஷாக்.
'போர் முனைப்பிலும்' தீராத
இப் பிரச்னைக்குத்
தேவையொரு புரட்சி
லெனின் வழிவந்த
'ஸ்டாலினு'க்குத் தெரியாமலா
இருக்கும்?

* * *

**க**ருப்பம்புலம் எங்க இருக்குன்னு தெரியுமா சுமின்னு கேட்டாங்க எடிட்டர். நான் என்னத்தக் கண்டேன்? என்ன சமாசாரம்னதும் ஒரு லெட்டரைக் கொடுத்தாங்க. அவங்களுக்கு வந்திருந்த ஒரு ரீடர்ஸ் லெட்டர்.

இட் ஸேஸ், அந்த ஏரியாவுல ஒரு நூதனமான தொத்து வியாதி பரவியிருக்காம். ஒன் ருபீ காயின்ல இந்திரா காந்தி, அம்பேத்கர் படம் அச்சிட்டிருந்தா, அந்த காயினுக்கு ஒன் லாக் அவார்டுன்னு யாரோ கிளப்பி விட்ருக்காங்க.

அவ்ளோதான், கடைகள்லயும் ஹோட்டல்ஸ்லேயும் பஸ்லேயும் பிச்சைக்காரங்ககிட்டேயும் காயின்ஸுக்கு செமை டிமாண்ட். நோட்டையெல்லாம் சேஞ்சா மாத்தி, இந்திரா காந்தி இருக்காங்களா, அம்பேத்கர் இருக்காரான்னு சும்மா சுரண்டல் லாட்டரி கணக்கா தேடிட்டிருக்காங்களாம் மக்கள்! இதுல காமெடி என்னன்னா, பஸ் கண்டக்டர்ஸ் வர்ற சேஞ்சை எண்ணி பைல போட்டு, டிக்கெட் தர்றதை விட்டுட்டு, ஒவ்வொரு காயினா புரட்டிப் பார்த்துட்டுத் தான் டிக்கெட் கிழிக்கறாங்களாம்!

* * *

# மங்களகரமான ஆட்டோ ஸ்டிரைக்!

**கொ**ஞ்சம் வருஷம் முன்னாடி ஸ்டெல்லா மேரீஸ் ஸ்டூடன்ட்ஸ் சில பேர், பஸ் கண்டக்டர்ஸுக்கு அடிப்படை இங்கிலீஷ் பேச கத்துக் குடுத்தாங்க. அது ரொம்ப யூஸ்ஃபுல்லா இருந்ததுன்னு அப்போ சில கண்டக்டர்ஸ் சொன்னாங்க. சென்னை ஆட்டோ டிரைவர்சுக்கு ஏதாவது உபயோகமா கோர்ஸ் எடுக்கணும்னா எப்படிப் பேசறதுன்றதுலேருந்தே ஆரம்பிக்க வேண்டியதுதான். பத்து முறை ஆட்டோவுல போனா ஒன்பதே முக்கால் முறையாவது டிரைவருடைய முறைப்புக்கு நாம உள்ளாக வேண்டியிருக்கு. போதாக்குறைக்கு மீட்டரெல்லாம் பி.டி. உஷாவைப் பின்னுக்குத் தள்ளிட்டு ஓடுது. அதனாலதான் எந்தக் காரணத்துக்காக ஸ்டிரைக் பண்ணாலும் ஆட்டோ அண்ணாச்சிகளுக்கு பப்ளிக் சிம்பதி கிடைக்கறதேயில்ல... ஸ்டிரைக் நடந்தப்போ ரோடெல்லாம் அமைதியாயிருக்குன்னு சிரமத்துக்கிடையிலயும் சந்தோஷப்பட்டாங்க ஜனங்க! 'சென்னையில் ஆட்டோ ஸ்டிரைக் மங்களகரமாக நடந்தேறியது'ன்னு ஹெட்லைன் போடாத குறைதான்!

* * *

**ஹி**ண்டு கார்டூனிஸ்ட் கேசவ்வோட ஸ்கூல் மாணவ/மாணவிகள் நேருக்கு நேர்.

அத்தனை ஸ்டூடண்ட்ஸும் ஒட்டுமொத்தமா சச்சின் கார்டூனுக்கு நேயர் விருப்பம் தெரிவிக்க, ஒண்ணே கால் நிமிஷத்துல அதை வரைஞ்சு காட்டியிருக்கார் கேசவ். அந்த கார்டூனுக்கு ஸ்பெஷல் மீனிங் என்ன...? இரண்டு நிமிஷம் யோசிச்சப்புறமும் தெரியலைன்னா இந்தப் பக்கத்தைத் தலைகீழா கவுத்துப் படியுங்க!

சச்சினுக்கப்புறம் வாஜ்பாயில ஆரம்பிச்சு ஷாருக், சோனியா, கபில்னு நிறைய ரிக்வெஸ்ட்ஸுக்கு அன்னிக்கு கேசவ் கார்ட்டூன் போட்டிருக்கார். அவரா விரும்பிப் போட்டது சூப்பர் ஸ்டாரை!

இந்த நிகழ்ச்சி உல்லாஸ் டிரஸ்ட் ஏற்பாடு பண்ண, மியூசிக் அகாடமி ஹால்ல நடந்திருக்கு.



• கேசவ் விருப்பம்

* * *

**அ**காடமின்னதும் ஞாபகம் வருது. நீ என்ன தொடர்கதை ரைட்டரான்னு எடிட்டர் ஒரு தாக்கு தாக்கினாங்க. வாரா வாரம் On a Musical Track பத்தியே எழுதிட்டு வரியேன்னு ஆரம்பிச்சாங்க.

ஆக்சுவலா அந்த ப்ரோக்ராம் பத்தி தொடர்கதையே எழுதற அளவுக்குச் சரக்கு இருக்கு – இன்ஸிடன்ட்ஸ், எமோஷன்ஸ், காரக்டர்ஸ், சஸ்பென்ஸ் – எல்லாம்! (சூப்பர் மார்க்கெட் சகாப்தம் முடிஞ்சப்புறம் எடிட்டர்ட சான்ஸ் கேக்கலாம்னு இருக்கேன்.) பட் எல்லாத்தையும் விட இம்பார்டன்ட், ஒரு ஃபீல்ட்ல இருக்கறவங்க ஒண்ணு சேர்ந்து ஈகோ பார்க்காம ஒரு நிகழ்ச்சிக்கு உழைச்சா, அதை எவ்வளவு சிறப்பா செய்யலாம்; அந்த எக்ஸ்பீரியன்ஸ் எவ்வளவு பெரிய சொத்துன்றதை இந்த 'டிராக்'குல தெரிஞ்சுக்கலாம். ஒரு சின்ன எக்ஸாம்பிள் சொல்லணும்னா அம்பது மியூசிஷியன்ஸை ஒரு ரிஹர்சலுக்கு வரவழைக்க குறைஞ்சபட்சம் நூறு போன் பண்ணியாகணும். (பெரிய பெரிய ஸ்டார்ஸ் கூட ரிஹர்சல் பண்ணாங்க பாருங்க!)

• என்ன ஸ்பெஷல்?

முதல்ல அவங்க அவைலபிலிடி தெரிஞ்சுக்க, அப்புறம் உறுதிப் படுத்த. சமீப காலமா பாம்பே ஜெய்ஸ்ரீ யாருக்காவது கச்சேரி டேட் தர மறுத்திருந்தாங்கன்னா, விரல் தேயத் தேய இந்த வேலையில அவங்க முழுகியிருக்காங்க என்கிறது கூடக் காரணமாயிருக்கலாம்!

ஜெய்ஸ்ரீயோட பல பொறுப்புகள்ல ஒண்ணுதான் இது. இந்த மாதிரி ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு வேலை. ஒரு ரிசர்ச் டீம் கல்கி ஆபீசுக்குக் கூட வருவோம்னு பயமுறுத்திக்கிட்டிருக்கு –பழைய இஷ்யூஸெல்லாம் பார்க்க. பை த வே மன்ற உறுப்பினர்களுக்கு புக்கிங் பத்தி அடுத்த வாரம் கன்ஃபர்ம்டு நியூஸ் வரும்.





• பெரிய சொத்து

— சுபி

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

சச்சின் பளு தூக்கற கருவி மாதிரி பேட்டை ஏன் தூக்கிப் பிடிச்சிருக்கார்னா, அவர் மத்தவங்களை விட ஹெவி பேட் யூஸ் பண்றார்!



# கண்ணுபடப் போகுதய்யா

**வ**ழக்கமான இரு குடும்பத்துப் பகை பற்றிய கதை என்கிற அசிரத்தை ரசிகர்களுக்கு உண்டாகிவிடப் போகிறதே என்று ஒரு வசனம் சொல்கிறார்கள், படம் தொடங்கிய கொஞ்ச நேரத்தில். 'இது சாதாரணப் பகை அல்ல; சரித்திரப் பகை.'

தேச சரித்திரமா? உலக சரித்திரமா என்று கொஞ்ச நேரமாவது ரசிகர்கள் சிண்டைப் பிய்த்துக் கொள்ளத்தான் வேண்டும். இரு கைகளுமில்லாமல், விஜய்காந்த் குடும்பத்தைப் பழிவாங்கத் துடிக்கும் ராதாரவியின் புலி நடை எதிர்பார்க்க வைக்கிறது. புராண காலத்துச் சிரவணன் போலத் தந்தைக்கு சிகுருஷை செய்து கொண்டு, நேரம் கிடைத்தால் வன்மம் காட்டிக் குமுறும் அவர் மகன் ஆனந்த்ராஜ் திறமையாகச் செய்திருக்கிறார்.

ஆனால், எல்லாம் எதற்காக? வீட்டுப் பெண்ணை வேலைக்காரன் காதலித்துக் கல்யாணமும் பண்ணிக் கொண்டு விட்டதற்கான சரித்திரப் பகை மட்டுமா இது? விஞ்ஞான, பூகோள, கணித – இன்னபிற துறைசார்ந்த பகை எனவும் சொன்னால், விளக்கம் தரப் பிரச்னை ஏதும் இருக்கப் போவதில்லை. எதையும் தாண்டிய புனிதமல்லவா, அந்த விஷயம்!

சிவகுமாரும் லட்சுமியும் காதலித்து, (விஜய்காந்த் – சிம்ரன் காம்பினேஷனை ஒப்பிட, இது இன்னமும் இளமையாகவே தெரிகிறது) மணம் புரிந்து கொண்டு அடைக்கலம் தேடி, யாரோ வாசு தேவநாயரோ, நாயக்கரோ – அவரது சமஸ்தானத்துக்கு ஓடுகிறார்கள். அரிவாள் மீசை அப்பா விஜய்காந்த் அவர்களைக் காப்பாற்றத் தன் உயிரைத் தந்து, இலவச இணைப்பாகத் தன் மகன் விஜய்காந்தையும் தந்துவிட்டுப் போக, இந்தக் குடும்ப நல்வாழ்வுக்காகத் தன் காதலி முதல் காலணி வரை தியாகம் செய்கிறார், மகன் விஜய்காந்த்.

எதற்காக? அது சரித்திரப் பகை என்றால், இது சரித்திரப் பாசம். இனி எந்தப் பயல் துணிந்து சரித்திரத்தின் பக்கம் கவனம் வைப்பான்? ஓட ஓட விரட்டி உதைத்துப் புரட்டுகிறார், இயக்குநர் பாரதி கணேஷ்.

மறுபடியும் மறுபடியும் நடனமாடிக் குலை நடுங்கச் செய்கிறார் விஜய்காந்த். அதுவும் இங்கே சிம்ரனுடனும் ரதிகா சவுத்ரியுடனும். தமது தமிழ்ப்பற்று அளவுக்குத் தமிழ் மக்கள் மீதும் பற்றிருந்தால் இனியொருதரம் ஆடத் தொடங்குமுன் கண்டிப்பாக யோசிப்பார்.

சண்டைகளைக் குறைத்துக் கொண்டு, நல்லுபதேசம் வழங்குகிற புதிய ஃபார்முலாவை அரங்கேற்றியிருக்கும் விஜய்காந்த், காதல் என்றால் என்ன? திருமணம் எத்தகையது? வாழ்க்கை என்பதில் அடங்கிய தத்துவங்கள் யாவை? பகை என்பதன் விளைவுகள் எத்தகையவை? என்பதாகத் தாம் தோன்றும் ஒவ்வொரு காட்சியிலும் ஒரு தத்துவத் தோரணம் கட்டுகிறார். போதாக் குறைக்கு ஒரு காட்சியில் போதிசத்துவர் போல் அமர்ந்து, கீதையோ என்னவோ படித்துத் தம் வளர்ப்புப் பெற்றோரின் வயிறு கலங்கச் செய்கிறார்.

கிராமத்து ராஜா, சிவப்பு பெயிண்ட் அடித்த சாரட் வண்டி, வயல்வெளிச் சாலையில் உலு உலுஉலுஉலுவென்றொரு பாட்டு, அபாரமானதொரு தியாக வரலாறு – இவங்களையெல்லாம் பிலிம் இல்லாத தேசத்துக்குக் கடத்திப் போகணும்பா!

— ஔரங்கசீப்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)





# ஸ்ரீ ஹனுமத் ஜெயந்தி மஹோத்ஸவம்

## ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் பேயாழ்வார் திருக்கோயில்
## மைலாப்பூர், சென்னை – 4.

| தேதி | கிழமை | சிறப்பு அலங்காரம் 5.00 P.M. | நிகழ்ச்சி நிரல் 7.00 P.M. |
|---|---|---|---|
| 29.12.99 | புதன் | சந்தன காப்பு | ஸ்ரீமதி பிரபாவதி கணேசன் & ரேவதி கிருஷ்ணா இரு வீணை |
| 30.12.99 | வியாழன் | வெற்றிலை பட்டி அலங்காரம் | ஸ்ரீமதி சரோஜா & ஸ்ரீமதி லலிதா (Vocal) Bombay Sisters & Party |
| 31.12.99 | வெள்ளி | புஷ்ப அங்கி | ஸ்ரீமதி பிரம்மானந்தம் & அனுராதா ஸ்ரீதரன் (Violin Duet) |
| 1.1.2000 | சனி | வெண்ணெய் காப்பு | ஸ்ரீமதி லலிதா & ஸ்ரீமதி நந்தினி & பார்ட்டி. Violin Duet |
| 2.1.2000 | ஞாயிறு | வெண்ணெய் காப்பு | ஸ்ரீமதி உஷா ராஜகோபாலன் & ஸ்ரீமதி மீரா சிவராம கிருஷ்ணன் கும்பகோணம் கே. ஜெயராமன் (Violin Duet) |
| 3.1.2000 | திங்கள் | புஷ்ப அங்கி | ஸ்ரீமதி ஸ்ரீலக்ஷ்மி ரங்கராஜன் & பார்ட்டி (Vocal) |
| 4.1.2000 | செவ்வாய் | வெற்றிலைப் பட்டி | திரு. ஸ்ரீராம் கங்காதரன் (Vocal) |
| 5.1.2000 | புதன் | சந்தன காப்பு | திரு. அல்பேரி வெங்கடேசன் & பார்ட்டி (Vocal) |
| 6.1.2000 | வியாழன் | ஸ்ரீ ஹனுமத் ஜெயந்தி 4.30 விசேஷ திருமஞ்ஜனம் 8.00 ஹரிபந்த சேவை ஹனுமத் ஆனந்த நர்த்தனம் பஜன்ஸ். | 9.00 A.M. ஞானானந்த சங்கீர்த்தன பஜனமாதர் மண்டலி பஜன்ஸ்<br>6.00 P.M திருமதி நீலா குஞ்சுமணி புல்லாங்குழல் சிக்கல் சகோதரிகள். |
| 7.1.2000 | வெள்ளி | 5.00 விசேஷ வெண்ணெய் காப்பு ஏகதின லட்சார்ச்சனை | ஹரிபந்த சேவை |
| 8.1.2000 | சனி | புஷ்ப அங்கி | திரு. டி.எம். கிருஷ்ணா with V.V. Ravi and அருண்பிரகாஷ் (Vocal) |
| 9.1.2000 | ஞாயிறு | வெற்றிலைப் பட்டி | மண்டலின் U. ராஜு & பார்ட்டி |
| 10.1.2000 | திங்கள் | சந்தனக் காப்பு | திருமதி ராஜலக்ஷ்மி சந்தானம் (Vocal) |

**6.1.2000** வியாழக்கிழமை மாலை 4.30 மணியளவில் 108 லிட்டர் பால், 108 லிட்டர் தயிர், 12 கிலோ தேன், 108 இளநீர், வாசனை திரவியங்கள் ஆகியவை கொண்டு விசேஷ திருமஞ்ஜனம் மஹா அபிஷேகம் ஹனுமத் ஜெயந்தி அன்று ஸ்ரீ வீரஆஞ்ஜநேயருக்கு நடைபெறும். இதில் பக்தர்கள் பங்குகொண்டு ஸ்ரீ வீர ஆஞ்ஜநேயர் பரிபூரண கிருபா கடாட்க்ஷம் பெறும்படி பிரார்த்திக்கின்றோம் கட்டணம் ரூ. **250/-**

**7.1.2000** ஸ்ரீ வீர ஆஞ்சநேயர்க்கு ஏகதின லட்சார்ச்சனை நடைபெறும். கட்டணம் ரூ. **50/-**

லட்சார்ச்சனை ரூ. **50/-** விசேஷ திருமஞ்ஜனம் ரூ. **250/-** அனுப்பும் பக்தர்களுக்கு வெள்ளி ஹனுமார் டாலர் வழங்கப்படும். **ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் லட்சார்ச்சனை கமிட்டி** என்ற பெயருக்கு MO, DD காசோலை அனுப்பவும். (கொரியரில் பிரசாதம், வெள்ளி டாலர் அனுப்பப்படும்.)

இங்ஙனம்,

பக்தர்கள் **MO, DD,** காசோலை அனுப்ப வேண்டிய முகவரி:

**ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் லட்சார்ச்சனை கமிட்டி,**
**S. ஸ்ரீ ரங்கராஜபட்டாசாரியார் (செயலாளர்),**
**எண் 5, கேசவப்பெருமாள் சன்னதி வீதி,**
**மைலாப்பூர், சென்னை – 600 004.**
**போன்: 4610179**

**லட்சார்ச்சனை கமிட்டி**

**C. ரங்காச்சாரி**
**T.S. நாகோஜிராவ்**
**S. ஸ்ரீரங்கராஜபட்டர்**
**T. சம்பத்குமார்**
**T.M. ராஜகோபால ஐயங்கார்**

